# நைடதச் சுருக்கம்.

[அரும்பதவுரை முதலியவற்றுடன் கூடியது.]

ஸ்ரீ என். ரத்தினம் அன் கோ.
பசுமலை.

ஸ்ரீனலோமினி அச்சியந்திரசாலை,
மதுரை.

 1921. [விலை அணா 8.

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 5 | அழிசாஆர் | அழிசாவார் |
| 18 | 3 | அன்னலே | அன்னிலே |
| 24 | 7 | திருமணப் படலம் | மணம்புரிபடலம் |
| 32 | 9 | குதமற் | குதமற் (ற) |
| 35 | 11 | விதர்ப்ப | விதர்ப்பன் |
| 35 | 23 | படுவரல் | படுபரல் |
| 41 | 19 | இருத்தி | இருத்தி' |
| 69 | 19.20 | அறிதல் அவற்றை[illegible]ப் | அறிதலைப் |
| 69 | 21 | ஸ்திரீகள்என்பது | ஸ்திரீகள்இருந்தனர்என்பது |
| 75 | 7 | உறவகை | உறுவகை. |

12-வது பக்கம் 6-வரிக்கீழ். 'நளன் தூதுப் படலம்' என்பதையும், 14-வது பக்கக் கடைசியில் 'பிறகு இந்திரன் நளனைப் பலவாறு புகழ்ந்துரைத்தான்' என்பதையும் பெய்து படித்துக் கொள்க.

# முன்னுரை.

பாண்டிய தேசத்தைப் பரிபாலித்த வரதுங்க பாண்டியனுடைய தம்பியாகிய அதிவீரராம பாண்டியன் எழுதிய பல நூல்களில், இந்நூல் கற்பனாலங்காரம் கொண்டு விளங்குவதால், 'நைடதம் புலவருக்கு ஔடதம்' என்று வழங்கப்படுகிறது. நளன் சரித்திரத்தைக் கூறும் நளவெண்பா என்னும் அரிய நூல் புகழேந்திப்புலவரால் பாடப்பெற்றது. நைடதத்தின் சில பாகங்கள் ஸ்கூல் பைனல்; இன்டர் மீடியேட் மாணவர்க்குப் பாடமாக வைக்கப்பெற்றன. ஆயினும், முழு நூலையும் மாணவர்கள் படித்துணரத்தக்க புஸ்தகம் இன்மையின், யாமிதனைத் தொகுத்தோம். அவசியமான இடங்களில், கதைத் தொடர்பு அற்றுப் போகாமல் இருக்கும்படி இடையிடையே உரைநடை வரைந்து இதிற் சேர்த்திருக்கிறோம். அன்றியும், கடினமான இடங்களிற் சந்திகளைப் பிரித்தும், இடக்கானவற்றுக்கு வேறு வார்த்தைகளைப் பெய்தும், முடிவில், செய்யுட்களுக்குக் குறிப்புரை இட்டுமிதனை வெளியிடுகிறோம்.

போதனாமுறைக் கலாசாலை (Teaching School,) உயர்தர கலாசாலை மாணவர்க்கும், பிறர்க்கும் இது மிக்க பலன் அளித்து, அவர்கள் தமிழ் நூல்களை மேன்மேலும் கற்க ஆவலூட்டுமென்று நம்புகிறோம்.

# நைடதச் சுருக்கம்.

## நாட்டுப் படலம்.

ஒழுகு நீம்புனல் சிறைசெய்தும் ஓதையும் உழுநர்
குழீஇன் கம்மையும் உழத்தியர் குரவையின் ஆர்ப்பும்
கழனி வாழ்கென வான்முளை வித்துநர் கலிப்பும்
மழைமுழக்கொடு மாறுகொண் டொலித்தன மாதோ.

புன்னை வாய்த்தவழ் பணிலங்கள் உயிர்த்தமென் முத்தம்
துன்னு டைக்கரும் பீன்றவெண் முத்தமும் கமழும்
தண்ணந் தாமரை சொரிந்தவெண் முத்தமும் தயங்கி
வெண்ணி லாக்கதிர் விரித்தலிற் குமுதம்வாய் விள்ளும். (2)

கொடியன மகளிர் தங்கள் குழைபுதண் மருங்கே வாளா
படுகொலை புரிவ மாதர் பண்டைநெடும் குவளைக் கண்ணே
அடிமிசை முறையிட் டென்றும் அரற்றுவ சிலம்பே சூழ்ந்து
கடிமது நுகர்வ அன்னோர் கருங்குழல் காமர்வண்டே. (3)

கடல்படும் அமுதும் மல்லல் கான்படும் அமுதும் ஓங்கும்
தடவரை அமுதும் ஒன்றித் தலைமயக் குற்ற ஆற்றால்
உடைதிரை அமுதம் ஒன்றே உடையவிண் ணாடு கொல்லோ
நிடதநா டதற்கு நேரா நிகழ்த்தலாந் தகைமைத் தம்மா.

---

## நகரப் படலம்.

ஒற்றை ஆழியந் தேரவன் உயர்மதில் கடக்கப்
பெற்றி லாமையில் பிறங்குபொற் கதவங்கள் திறக்கும்
அற்றம் நோக்குவன் அந்நலார் இயல்புற அணியக்
கற்றை வெண்மதி சாளரத் தாடியிற் காட்டும். (5)

மறுவி கந்தவெண் மதியென வயங்கிய பித்தி
செறியு மாடங்கள் வெண்கதிர் பரப்பிடும் செவ்வி
நறவு யிர்த்தபைந் துணர்மலி கற்பக நாட்டை
வெறுவி தாமென வெண்ணகை புரிவது போலும்; (6)

வடிகொள் வெண்சுதைத் தீற்றிய மாடநீள் கழுத்தில்
படிய மைம்முகில் கதிர்விடு பானிலாக் குழவி
முடியின் மீதுறத் தவழ்தலால் முழுமெயும் வெள்ளைப்
பொடி அணிந்தருள் கறைமிடற் றண்ணலைப் பொருவும்.

உருவில் மைந்தரில் வேனில்வேட் குடைகுநர் இல்லை;
பொருளி லார்களில் தனதனைப் பொருவிலார் இல்லை;
தெருளில் மாக்களில் சேடனில் தாழ்நர் இல்லை;
அருளி லார்களில் ஐந்தரு நிகர்க்கலார் இல்லை. (8)

வளமலி இந்நகர் மன்னர் மன்னவன்
தளைஅவிழ் நறுமலர்த் தண்ணக் தாரினன்
களைகணு உலகொரு மூன்றும் காத்தருள்
நளனெனப் பெயரிய நாம வேலினன். (9)

ஒன்னலர் மணிமுடி உரிஞ்சு தாளினன்;
கல்லையில் தோளினன்; கமலக் கண்ணினன்;
தன்னுயி ராமென உலகில் தங்கிய
மன்னுயிர் அனைத்தையும் புரக்கு மாட்சியான்.

வெங்கலி இருள்கெட வெள்ளெரி லாஉமிழ்
திங்களம் கவிகையான்; திகிரி ஒன்றினால்,
அங்கண்மா நிலமுழு தளிக்கும் ஆற்றலான்;
மங்குலின் எழுமடங் குதவும் வண்கையான். (11)

## அன்னத்தைக் கண்ணுற்ற படலம்.

இத்தகைய நளனுடைய சிறப்புகளைக் கேள்வியுற்ற தமயந்தி அவன்பால் நீங்காத காதலை அடைந்திருந்தாள், நளனும் தமயந்தியின் வனப்பு குணமுதலியவற்றைக் கேள்வியுற்றான்.

தளர்வொடு மெலிந்தும் வையம்
    தனிக்குடை நிழற்றும் பைம்பொன்
கிளரொளிப் பூணான் வீமன்
    பாவையைக் கேட்டல் செய்யான்
அளியென உயிரை உண்மை
    அறத்தினை அறவிட்டாலும்
இளிவென எண்ணி மரணம்
    பூண்டவர் இரப்பர் கொல்லோ. (12)

ஒருநாள் நளன், குதிரையேறிப்பல தெரிவையரும், அரசரும் சூழ்ந்துவர, ஒருவனமடைந்து அதன் காட்சிகளை உற்று நோக்கினன்.

விண்புகு வியன்சினைத் தருக்கள் மேவிய
தண்கனிப் பொறையினால் தலைவணங்கின;
தெண்கடற் கலைபுனை செல்வ மாநிலப்
பெண்கொடி தாடொழும் பெற்றிபோன்றவே. (13)

மிடைந்திரு விசும்புறை அமரர் வெற்பினில்
கிடந்ததன் வளனெலாம் கவர்வர் ஆமெனக்
குடைந்துவண் டிமிர்பொழில் இடையிற் கொள்கடல்
அடைந்தன வாவியை அண்ணல் நோக்கினான். (14)

வரிச்சிறைத் தும்பிகள் ஊழுநல் வள்ளவாய்
விரித்தவெண் தாமரை விளங்கித் தோன்றுவ
தரித்திடு களங்கமெய் தயங்கத் தண்ணெனும்
திருக்கிளர் நிலவுமிழ் திங்கள் போன்றவே. (15)

அத்தடாகத்தில், மென்னடையுடைய ஒருஅரச அன்னத்தை நளன் கண்டான்.

சூழ்வளி யுடன்சுழல் சருகில் தோன்றிய
ஊழ்வழி மனஞ்செலல் உண்மை அன்றுகொல்?
தாழ்புலன் வழிமனம் சார ஓதிமம்
பாழியந் தோழினன் கையிற் பற்றினன். (16)

இரைத்தயர் புள்ளினுக் கிரங்கிப் புட்குலம்
விரித்தெழு சிறைவளி வீச மெல்லிதழ்த்
திருத்தகு தாமரை அலைதல் சேர்தடம்
வருந்தலை என்றுகைம் மறித்தல் போன்றதே. (17)

இன்னபொன் னிறஅனங் கண்டி லேனெனும்
மன்னர்மன் னவன்மதி வதன நோக்கியே,
அன்னவன் காமலர் அமர்ந்த ஓதிமம்
நன்னய மொழிசில நவிறல் உற்றதே. (18)

சிறையொளிர் பொன்னிறை செல்வ நல்குமோ?
அறைகடல் பணியினன் நிறைவ தாங்கொலோ?
கறைகெழு வேலினாய் கருத்தின் உள்ளுற
நிறைதரு விழைவினை நீத்தல் வேண்டுமால். (19)

கோறல்செய் தால்உயிர்க் கொலைஞன் றேயலால்,
தேறினர்ப் பிழைத்தவன் பழியுஞ் சேருமால்;
தாறுபாய் கவுண்மதத் தறுகண் யானையாய்!
மாறுகொள் பகைஞர்க்கு மிதும னங்கொளார். (20)

அன்னைமுப் பதிதா ஆர்கொல் ஆற்றுவார்?
மன்னனேற் படுத்தலும் வெருவி வாவியில்
துன்னியாங் கிருந்தபுள் சொற்ற போழ்தினில்
இன்னலங் கடலுள்ஆழ்ந் திறக்கு மேகொலாம். (21)

பிரிவெனும் அழல்சுடப் பெடையி றக்குமே;
அரிதினிற் பெற்றஎம் பார்ப்பெ லாம்அயர்ந்(து)
இரைபெறுக் குடம்பையுள் அரற்றி எய்திய
பரிவினிற் சாமெனப் புகைத்துச் சோர்ந்ததே. (22)

ஆகுலத் துடன்மட அனத்தை நோக்கிநின்
சேகுறு பொன்னிறச் சிறகர் நோக்குறு
மோகமே பிடித்தனன் முழுது நோக்கினன்
ஏகுதி யென இறைவி டுத்தனன். (23)

---

## அன்னத்தைத் தூதுவிட்டபடலம்.

இங்ஙனம் விடப்பட்ட அன்னமானது அரசன்கொலைத் தொழில் செய்திலன் என்று தேறித் திரும்பவும் வந்துகையி லுட்கார்ந்து, அவனைப் புகழ்ந்துரைத்து, முன்தான் மொழிந்த வார்த்தைகளின் கொடுமையை நினைத்து, 'நீ மனமகிழ மாறு ஒன்றியற்றுவன்' என்று கூறிற்று. 'சக்கரவர்த்தியாகிய எனக்கு நீ என்ன உதவி செய்ய மாட்டுவை?' என்றான் நளன். அன்னம், விதர்ப்ப நாட்டையுடைய வீமராஜனுக்குப் புத்திரியாகிய தமயந்தியைப் பற்றிப் புகலலுற்றது.

ஒழுகொளி விரிந்த கதிர்மணி வண்ணன்
உந்தியம் தாமரை உறைவோன்
முழுமதிக் கலையுள் நிறைந்தபேர் அழகை
மொண்டுகொண் டரிபரந் தகன்ற
மழைமதர் நெடுங்கண் தமயந்தி வதனம்
வகுத்தனன் கரத்தினால் எடுத்த
புழைவழித் தோன்றும் விசும்பினை அன்றோ
களங்கமென் றின்னமும் புகல்வார். (24)

இத்தகை வனப்பின் மடவாலை தன்னை
எவ்வழிக் கண்டனை என்னில்
தைத்ததா ரணியும் அரம்பையர் வதியும்
தலந்துறந் திம்பரிற் போந்து
மொய்த்தபூம் பொய்கை காணிய தேய
முழுவதும் குறுகினன், அவற்றுள்
கைத்தலம் அமர்ந்த நெல்லியம் கனியில்
கண்டனன் விதர்ப்பர்கோ னகரில். (25)

செய்தொழிற் பயனால் உரைப்பரோ அன்றித்
தெளிகுநர் உரையினால் உரையார்;
ஐயமுற் றடனீபா டெய்துவான் முன்னர்
அறைந்தனன் எனமட அன்னம்
பெய்தசொல் அமுதம் உள்ளெலாம் பரந்து
பெருகிமேல் வழிதல்போ னகையாக்
கையினாற் பசும்பொற் சிறகரைத் தைவந்து
காதல்கூர் மொழிசில புகன்றான். (26)

பிறகு, நளன் தான் தமயந்தியைக் காதலித்ததை அதற்கெடுத்துரைத்துத் தன்னைமணக்குமாறு கேட்கும் வண்ணம்

தம்பந்திபால் தூதுபோக்க, அது பறந்து சென்று குண்டின புரி போய்த் தமயந்தி விளையாடும்சோலையை அடைந்தது.

மீது லாயவெண் தாரகை நாப்பணில்
சீத வெண்கதிர்த் திங்கள்கண் டாலென
மாதர் நோக்கின் மடந்தையர் நாப்பணில்
காதல் கூர்தம யந்தியைக் கண்டதே. (27)

தமயந்தி அவ்வன்னத்தைப் பிடிக்க விரும்பினள்.

அவிர்பூண் ஒளியா மடடங் கினளாய்க்
கவர்வான் வரல்கண் டுமகன் றிலதாய்த்
துவர்வாய் மயிலொட் டிடலா குமெனும்
நன்வதிர் அனமெல் லநடந் ததுவே. (28)

அச்சோலையில் குருக்கத்தியடர்ந்த இடத்தில், தமயந்தி அதைத் தனியேகாண, அது தான் தெய்வலோக அன்ன மென்றும் நிஷத நாட்டிலுள்ள வாவியின் வளப்பை நோக்க இவ்வுலகத்தை அடைந்ததென்றும் கூறிய பிறகு, நளனது சிறப்பைப்புகழ்கின்றது.

முருகுண்டு...... டுபயில்நார்களைன்வாண்முகத்தைப்
பெருவெண்மதியநிகரெய்தப்பெறுமை அன்றோ.
கருதும்கமலத்துன்றநான்முகன்கைவருந்த
வருதிங்கடோறும்புதிதாகவகுத்தல்செய்வான். (29)

திங்கட்கலையின்செம்பூங்கதிரின்செவ்விவாய்ப்பக்
குக்குற்கமலமலர்தோய்ந்துகளிப்புறுமல்
வைபங்கட்குமுதமுற்பெல்போலுநீபார்த்திவன்றன்
தொங்கல்தனையடைந்துறமதம்பிறயாதுதுயாத்தல் (30)

ஒழுகொளி விரிந்த கதிர்மணி வண்ணன்
உந்தியம் தாமரை உறைவோன்
முழுமதிக் கலையுள் நிறைந்தபேர் அழகை
மொண்டுகொண் டரிபரந் தகன்ற
மழைமதர் நெடுங்கண் தமயந்தி வதனம்
வகுத்தனன் கரத்தினால் எடுத்த
புழைவழித் தோன்றும் விசும்பினை அன்றே
களங்கமென் றின்னமும் புகல்வார். (24)

இத்தகை வனப்பின் மடவரல் தன்னை
எவ்வழிக் கண்டனை என்னில்
தைத்ததார் ரவியும் அரம்பையர் வதியும்
தலந்துறந் திம்பரிற் போந்து
மொய்த்தபூம் பொய்கை காணிய தேய
முழுவதும் குறுகினன், அவற்றுள்
கைத்தலம் அமர்ந்த நெல்லியம் கனியில்
கண்டனன் விதர்ப்பர்கோ னகரில். (25)

செய்தொழிற் பயனால் உரைப்பரோ அன்றித்
தெளிகுநர் உரையினால் உரையார்;
ஐயமுற் றுடனீபா டெய்துவான் முன்னர்
அறைந்தனன் எனமட அன்னம்
பெய்தசொல் அமுதம் உள்ளெலாம் பரந்து
பெருகிமேல் வழிதல்போ லகையாக்
கையினாற் பசும்பொற் சிறகரைத் தடவந்து
காதல்கூர் மொழிசில புகன்றான். (26)

பிறகு, நளன் தான் தமயந்தியைக் காதலித்ததை அதற் கெடுத்துரைத்துத் தன்னை மணக்குமாறு கேட்கும் வண்ணம்

தமயந்திபால் தூதுபோக்க, அது பறந்து சென்று குண்டின புரி போய்த் தமயந்தி விளையாடும்சோலையை அடைந்தது.

மீது லாயவெண் டாரகை நாப்பணில்
சீத வெண்கதிர்த் திங்கள்கண் டாலென
மாதர் நோக்கின் மடந்தையர் நாப்பணில்
காதல் கூர்தம யந்தியைக் கண்டதே. (27)

தமயந்தி அவ்வன்னத்தைப் பிடிக்க விரும்பினள்.

அவிர்பூண் ஒலியா மலொடுங் கினளாய்க்
கவர்வான் வரல்கண் டுமகன் றிலதாய்த்
துவர்வாய்ப் பயிரெட் டிடலா தமெனும்
நவ்வதிர் அனமெல் லநடந் ததுவே. (28)

அச்சோலையில் குருக்கத்திபடர்ந்த இடத்தில், தமயந்தி அதைத் தனியேகாண, அது தான் தெய்வலோக அன்னமென்றும் நிஷத நாட்டிலுள்ள வாவியின் வனப்பை நோக்க இவ்வுலகத்தை அடைந்ததென்றும் கூறிய பிறகு, நளனது சிறப்பைப் புகன்றது.

முருகுண்டு...... நயில்நார் நளன்வாண் முகத்தைப்
பெருவெண்மதியாகிகெய்தப் பெருமை அன்றே
கருதும் கமலத் துன்றகான் முகன் கைவருந்த
வருதிங்கட் டோடும் புதிதாக வருத்தல்செய்வான். (29)

திங்கட் கலையின் செழும்பூங் கதிரின் செவ்வி வாய்ப்பக்
கங்குற் கமலமலர் தோய்ந்து களிப்புறுமல்
பைங்கட் குமுதமுறில் போலுமே பார்த்திவன் றன்
தொங்கல் தனையடைந் துறுமதப் பிறபா துறுமாப்பத்தல் (30)

அவ்வன்னம், 'தமயந்தியே! நீ நளன் போலவே, உயர் குடிப்பிறப்பும், பருவமும், வனப்பும், அறிவும், செல்வமுதலியனவும் கொண்டுள்ளாய். ஆதலால், அவனை அடையத்தக்கவள்' என்றது.

விரையுயிர்க்கும் தாமரைக்கு வெய்யவனும் சேதாம்பல்
மருவுயிர்க்கும் நாண்மலர்க்கு மாமதியும் அல்லாமல்
உரைபெறுநற் றலைவர்பிறர் உளர்கொலோ பொலன்சிறைய
அரசமட அனமெனையும் அன்னளாய் எண்ணுதியால். (31)

ஐயமுறே னளன்மார்பில் அணியலணி குவனன்றி
மையல்புரி வேள்வரினும் மன்றலந்தார் சூட்டுவனோ
நெய்யொழுகு வேற்றாதைபிறர்க்களிப்ப நேர்குவனேல்
வெய்யதழற் புகுந்தாவி விட்டுரைநிறுத்துவனால். (32)

இங்ஙனம் தமயந்தியின் சம்மதத்தை உணர்ந்த அவ்வன்னம், அவளையெப்போதும் எண்ணிக் கொண்டிருந்த நளன்பால் திரும்பிவருதலும், அவன், 'தூண்டல் செய்யா மணிவிளக்கைக் கொணர்ந்தாய்கொல்?' என்று கேட்டான்.

திருந்தார் வெம்மௌலி மணிஉரிஞ்சித்
திகழும் கழற்கால் தேர்வேந்தே!
வருந்தேல் வருந்த னீவேண்டின்
வாரா தனவு முளகொல்லோ?
முருந்தேர் முறுவல் முகம்பெற்று
வந்தேன் எனலும் மூர்ச்சைதெளிந்(து)
அருந்தா அமுதம் அருந்தினன்போல்
பலகாற் கேட்கும் அகமகிழும். (33)

## இந்திரப்படலம்.

தெய்வலோகத்திலுள்ள இந்திரன் சபைக்கு நாரத முனிவர் ஒருநாட் சென்றார். தெய்வநாயகன் உடன் எழுந்து அம்முனிவர்க்கு அர்க்கிய பாத்தியமுதலியன அளித்து முகமன்கூறி ஓர் ஆசனத்திருத்தினன். பிறகு அவர் அங்கு வந்தமைக்கும் பூலோகமன்னர் இதுவரை தன் சபைக்கு வாராமைக்கும் காரணம் வினவினன். நாரதர், 'உலகத்தில் வீம ராஜனுக்கு மகளாகிய தமயந்தி உருவனைத்து மொருவடிவு கொண்டவளெனப் பிறந்திருக்கின்றாள். அவள் மேல் அரசர்கள் ஆசை கொண்டவராதலால் போர்முதலிய எக்காரியமும் செய்யா தொழிந்தனர்' என்றார்.

அத்தகைய மடவரலோர் ஆண்டகையை உளத்தமைத்தாள்
அவளை ஈன்ற
முத்தநெடுங் குடைவேந்தன் நிலவலயம் இனிதளிக்கும்
முதல்வர்க் கெல்லாம்
உய்த்துணரச் சுயம்வரமென் றோலைபோக் கினன் அதனை
உரைப்பான் எண்ணி
இத்தலையெய் தினனென்றான் இன்னிசைநூல் முழுதுணர்ந்த
யாழ்வல் லோனே. (34)

விண்ணகத்தும்பெறற்கரிய விழுப்பொருணீ பெறவேண்டின்
விரிநீர் சூழ்ந்த
மண்ணகத்து வருதியென மகபதிவாள் முகநோக்கி
மகிழ்ந்து கூறிப்

பண்ணமைந்த திங்குதலைத் தமயந்தி சுயம்வரத்திற்
பாரில் வேந்தர்
நண்ணியமர் விளைப்பரது காண்குவமென் றுசிபல
நவின்று போனான். (35)

இதனைக் கேட்ட இந்திரன் தமயந்தியைத் தானடைய வேண்டுமென்ற விருப்பம் மேலிட்டான்.

பூகமடல் கீறிஇள வாளைபுனல் காலும்
மேகமிசை தாவிடும் விதர்ப்பநகர் மன்னன்
ஓகையொ டளித்தவுயிர் ஓவிய நிகர்க்கும்
தோகைமண வோலைகொடு தூதுவர் அடைந்தார். (36)

அடைந்தவர்கள் நளனிடம் அவ்வோலையைக் கொடுத்தனர்.

முடங்கலில் வரைந்தவுரை முற்றுமுண ராமுன்
தடம்புயம் வளர்ந்தன வரைக்குவமை சாலக்
குடங்கையின் அகன்றவிழி சோனகரி செல்வான்
மடங்கலனை யானுள மகிழ்ச்சியொ டெழுந்தான். (37)

எழுந்த நளன் தேர் மேலேறிப் பரிவாரங்கள் சூழ்ந்து செல்லப்புறப்பட்டான். அங்ஙனம் செல்லுகையில் இந்திரனும், வருணனும், அக்கினிதேவனும், யமனும் வழியில் அவனைக் கண்டனர்.

பொற்றடந் தேர்மிசைப் பொலிந்து தோன்றிய
மற்றடந் தோளினன் வனப்பு நோக்கினார்;
உற்றதோர் வியப்பினுக் குள்ளம் ஈந்துதாம்
வெற்றடம் பாயினர் விண்ணு ளோரெலாம். (38)

நளனைக்கண்ட அத்தேவர்கள் அவனழகைத் தனித் தனி புகழ்ந்து பேசித், தமயந்தியைத் தாங்கள் அடையமுடியாதெனத் துணிந்தனர். தமயந்தியை அடையாமல் திரும்பினால் தேவமாதர் இழித்துரைப்பர் என்று இந்திரன் கூறிய பிறகு; தன்முன்னின்ற நளனிடத்தில் தானும் மற்ற மூன்று தேவரும் இன்னார் என உரைக்க, நளன் அவர்களைத் தொழுது நின்றான். இந்திரன், அவனை "அரசனே! உன்னிடம் நாங்கள் விழைவது ஒன்றுளது. அதனைப்பின்னர் கூறுவேன்" என்றனன். மண்ணரசனாகிய தன்னிடம் விண்ணரசர்களாகிய இவர்கள் விரும்புவது என்ன என்று நளன் ஆலோசித்தான்.

குறிப்பறிந் தீதலே கொடைமற் றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்கல் ஆதலிற்
பெறற்கரு மாவியும் பெட்பின் ஈகுவன்
திறப்பட இவருளம் தெரிந்த தில்லையால். (39)

ஒளிமுகம் இழப்பவர்க் காற்று நண்மைமீக்
கிளர்தர இல்லெனக் கிளக்கு மூர்ச்சனை
தெளிதர முகத்தினில் தெளித்தற் கன்றுகொல்
நளிபுனல் பொருளொடு நல்கு கின்றதே. (40)

உரவுநீர்க் கருங்கடல் உடுத்த மாநிலத்
தருளுடன் இம்மையின் அளித்த வான்பொருள்
மருவிய மறுமையில் வழங்கு பான்மையால்
இரவலர் தமரினும் இனியர் ஆவரே. (41)

உடைப்பெரும் பொருளினை உலகில் ஊதியம்
கிடைப்பதற் களித்தலில் கிளர்நி ரப்பினால்
அடுத்தவத் தேற்குநர்க் கார்வம் மீதுறக்
கொடுக்கிலோன் றேபல கோடி ஆகுமால். (42)

என்றுமற் றினையன எண்ணி வண்ணவான்
குன்றெனப் பணைத்துயர் குவவுத் தோளினான்
வன்றிறல் வாசவன் வதன நோக்கிமற்
றொன்றுநீ கேட்டியென் றுரைத்தல் மேயினான். (43)

என்னரும் தவத்தினன் றெனது தொல்குல்
முன்னையோர் அருந்தவம் முயன்ற பான்மைபோல்
பொன்னகர் துறந்துநீர் போதப் பெற்றனன்
சொன்னவை மறுக்கிலன் சொல்க என்றனன். (44)

வெயில்விரி மணிமுடி வீமன் நல்கிய
மயிலியல் மதர்விழி வளைக்கை மங்கைபால்
செயிரறு தூதுநீ செல்ல வேண்டுமென்(று)
உயிர்இரப் போரினும் உளையக் கூறினான் (45)

திருத்தகு செவியிடைச் சிலையின் ஊடுற
உருக்கிய செம்பினை ஊற்றி னால் என
மருத்துவன் தீமொழி கேட்டு மன்னர்கோன்
கருத்தழிந் தாருயிர் கலங்கி னானரோ. (46)

கலங்கி இதனைச் சொல்லுகிறான்:

எப்பொரு ளாயினும் யாவ ருள்ளமும்
கைப்படு நெல்லியம் கனியிற் காணுநீர்
துப்பிதழ் மடந்தைபாற் றூது போகெனச்
செப்பிய தெவன்கொலெம் சிந்தை ஓர்ந்துமே. (47)

வழங்கிய நும்முரை மறுது லென்றியான்
மொழிந்தனன் ஆயினும் முன்னம் நேரிழை
விழைந்தஅத் தளிரியல் வெள்கு றுதுளம்
குழைந்துநம் பான்மணம் பொருந்தல் கூடுமோ? (48)

இனையன வாசவன் இயம்பும் எல்லையின்
வனைமலர்க் கோதைதன் வருத்த னாகியும்
தனியற்ன் இழுக்குறுத் தகையன் ஆதலின்
அனையதற் கிசையந்தனன் அலங்கல் வேலினான். (49)

எந்த மந்திரத்தை ஜபித்தால், எவர் கண்ணுக்கும் புலப் படாமற் செல்லலாமோ அதனை, நளனுக்கு இந்திரன் உப தேசித்தனுப்ப, அவன் தேரூர்ந்து குண்டினபுரி அடைந்து தமயந்தி வாழ்ந்த கன்னிமாடம் சேர்ந்தான்.

மின்னிடை அரம்பையர் சூழாத்தாள் மேவிய
அன்னமென் னடையபி ராணி யாமென
நன்னுதல் மடந்தையர் நாப்பண் இன்னகைக்
கன்னியிற் றிருத்தகல்கண் களிப்ப நோக்கினான். (50)

மாயிருஞாலத்தானேன் மண்ணினிற்பொலிந்ததில்லை,
மீயுயர்விசும்புளானேல் விசும்பினிற்சிறந்ததுண்டோ?
பாயொளி பருதி வேலான் பாதலத் துள்ளா னாயின்
மேயகீழ் உலகே எல்லா உலகினு மேல தாமால்.

என்று தன் தோழியரொடு தானும் நினைத்தாள். அப் போது, அவன் தான் தேவர் பொருட்டுத் தூது வந்ததாகத் தமயந்தியைப் பார்த்துக் கூறுகின்றான்.

ஐந்தரு நீழல் வேந்தன் ஆர்கலிக் கிறைவன் வெய்ய
செந்தழற் கடவுள் தென்பால் திசையுறை தரும னின்னோர்
பைந்தொடி நின்னை வேட்டிப் பரினில் இழிந்து போந்து
சிந்தனை பிறிதாய் மாழ்கித் தெருமரல் எய்து கின்றார். (52)

இங்கிவர் தம்மை ஆசைக் கிறைவரென் றறைவ தெல்லாம்
தங்கிய திசையின் போரால் சாற்றிய மாற்ற மன்றே;
கொங்கவிழ் குழையிற் றாவிக் குமிழ்மிசை மறியும் வேற்கண்
அங்கனும் மேனி யாய்நின் ஆசையால் வந்த தன்மால். (53)

நளன் தேவர்கள் சிறப்பைப் பற்றி எத்துணை கூறியும் தமயந்தி அவர்களை மணக்க முடியாதென்று மொழிந்தாள்.

காரிகை உளமும் யாவும் கவர்ந்தனன் கரந்து போய
மூரிவெஞ் சிலைக்கை வீரன் கடவுளர் முன்ன ரேகி
நேரிழை தன்பாற் றூது போயபின் நிகழ்ந்த வெல்லாம்
சோர்வுறு துரைத்தான் தேவர் தோன்றல்பால் மகிழ்ச்சி கூர்ந்தார்.

## சுயம்வரப் படலம்.

வெள்ளியம் கிரியின் மேய
விஞ்சையர் இயக்கர் விண்ணோர்
ஒள்ளொளி எறிக்கும் பைம்பொன்
மௌனமும் உலகில் வேந்தர்
நள்ளிருள் சீக்கும் செய்ய
நகைமணிக் கொடிஞ்சித் தேரும்
தெள்ளிதின் உணர்ந்து ளோர்க்கும்
தெரிவில மயங்கு மன்றே. (55)

வந்த யாவரையும் வீமன் எதிர்சென் றழைத்தான். பிறகு யாவரும் சுயம்வர மண்டபம் அடைந்தனர். நான்கு தேவர்களும் நளனுருக் கொண்டு அங்குச் சென்றனர். நளனும் அவ்விடம் சேர்ந்தான்.

தெரியல்சூழ் குவவுத் திண்டோள்
    சிலைவலான் இனிதின் எய்த
அரசவை இருந்த செவ்வி
    அரசிளங் குமார் எல்லாம்
குரைகடன் முகட்டில் தோன்றும்
    குளிர்மதி காண்ட லோடும்
விரிகதிர் மழுங்கு வானின்
    மீனினம் என்னல் ஆனார். (56)

எல்லா மன்னரும் நிறைந்த ஆங்குத் தமயந்தி தன் சேடியர் சூழ வாலுற்றாள்.

இழைசுடர் எறித்த லானும்,
    இருவிசும் புறையும் வந்தோர்
பொழிமலர் மிடைத லானும்
    பூசல்வண் டிமிர்த லானும்;
உழைபொரு தடங்கட் பேதை
    உருவினைத் தெரியக் காணார்
விழைவொடு நோக்கும் வேந்தர்
    விழிநெருங் குற்ற மாதோ. (57)

தமயந்தி வீமனை நமஸ்கரித்தாள். மூவுலகாளும் வேந்தர் பலர் அங்கு வந்திருந்ததால், அவர்யாவரையும் இன்னுமென் அப்பெரும் சபையில் வீமன் காணமுடியாதவனாகித் தூ புரியுமாறு திருமாலைத் தியானித்தான். அவ்வரசரைத் தெரி ந்து சொல்லத் தக்கவள் கலைமகளே என அவர் பிரம குரைக்கப் பிரமன் சரஸ்வதியை அனுப்பினன். அந்த மானிடப் பெண்ணுருவடைந்து அச்சபையில் அமர்ந்த அர சர்களைத் தமயந்திக் கெடுத்துரைத்தாள்.

பிள்ளைமான் நோக்கி! ஈங்கு
　　வைகிய பிறங்கற் றோளான்
அள்ளலை கமலப் போதில்
　　அரசிள அன்னம் காண
வள்ளுறை பிலிற்றும் தண்கார்
　　வரவெதிர் மயில்கள் ஆடக்
கிள்ளைபாட் டயரும் சோலைக்
　　கேகய நாட்டு வேந்தன். (58)

எந்திழை நங்காய்! இப்பால்
　　இனிதுறை குமரன் அன்னான்
தேந்துணர் ஊழ்த்த போதும்
　　தெரிவையர் இழைத்த சிற்றில்
காந்தெரி மணியும் பொன்னும்
　　காழ்அகில் துணியும் வாரிப்
பூந்திரை சுருட்டும் தெண்ணீர்ப்
　　பொன்னிநா டாளும் வேந்தே. (59)

நாடீடுசொல் நங்காய்! பைம்பொன்
　　நன்மணித் தவிசின் நாப்பண்
சேட்டிளம் பரிதி போல
　　ஈங்குறை திணிபொற் றோளான்,
பாட்டளி பேட்டி னோடும்
　　பருமுகை அவிழ்த்துத் தேறல்
கூட்டுணும் கமல வாவிக்
　　கொற்கையம் பதிக்கு வேந்தே. (60)

இப்படியே மற்ற மன்னருடைய குலமும், பெயரும், வான்முறையும் வழுவாமற் கூறப்பெற்ற பிறகு, நளனுருக் கொண்டு வந்த நான்கு தேவர்களும் நளனும் சொல்லப்படு கிறார்கள்:

கலைவளர் திங்கள் என்னக்
கடிகமழ் கமலம் வாட்டும்
திலகவாண் முகத்தாய்! ஈங்கு
வைகிய சிலைவேற் கானை,
வலனுடை வயிர வாளான்,
கற்பக மலிந்த தோளான்,
பலபகை வரைமுன் செற்ற
பகட்டெழின் மார்பி னானே. (61)

நகைமதி முகத்தாய்! ஈங்கு
வைகிய நாம வேலான்,
புகலரும் வெகுளி உள்ளத்
தொருவினன், பொங்கி ஆர்த்த
பகைஇருட் பிழம்பு சீக்கும்
பலசுடர் உமிழும் வாளான்,
தகைமைசால் புலவர் ஏத்தும்
தாலமே முடைய கோவே. (62)

அஞ்சனம் எழுதல் ஆற்று
தம்மவோ என்னு நையும்
வஞ்சிநுண் இடையாய்! ஈங்கு
வைகிய நாம வேலான்,

எஞ்சலில் தருமன்; தெண்ணீர்
இருங்கடல் உலகம் எல்லாம்
கெஞ்சவே ஒசை போய
நீதறு செங்கோல் வேந்தே. (63)

பாற்றிரை அமிர்தம் ஊறும்
படர்ஒளிப் பவளச் செவ்வாய்க்
கோற்றொடி மடந்தை! ஈங்கு
வைகிய குவவுத் தோளான்,
மாற்றரும் சிறப்பின் மிக்க
வளங்கெழு புவன வேந்தன்;
நாற்றிசைப் பரப்பும் சூழ்போம்
நலங்கெழு நேமி வேந்தே. (64)

போதரி நெடுங்கண் நல்லாய்!
பொருசிலை வேனி லானில்
கோதையர் மனமும் கண்ணும்
கூட்டுணும் குவவுத் தோளான்,
தாதவிழ் கமலப் போது
மலர்ந்தபூம் தடங்கள் தோறும்
மாதர்மென் முகங்கள் காட்டும்
வளங்கெழு நிடத வேந்தே. (65)

கடைசியிற் கூறப்பெற்ற ஐவரில் நளன் இவன் என்று தமயந்திக்குத் தெரியாது ஐயமுற்றுத் திகைத்தாள். கலைமகள் மற்ற நால்வரைக் கூறும் போது, இரட்டுற மொழிந்ததாலும், மாலையில் வண்டுகள் மொய்த்ததாலும், ஊழ்வினை கூட்டுவித்ததாலும், நளனையே நளனென நிச்சயித்தாள்.

இன்னரிச் சிலம்பு செம்பொற்
கிண்கிணி ஆர்ப்ப ஏகி
மன்னவர் மனமும் கண்ணும்
வண்டெனத் தொடர்ந்து வீழக்
கொன்னுனை வயிர ஒள்வாள்
நிடதர்கோன் குவவுத் தோண்மேல்
பொன்னரி மாலை சூட்டிப்
பூங்கழல் வணங்கி நின்றாள். (66)

தாவரும் சிற்றத் துப்பில்
தறுகண்மால் யானை அன்னை
மேவலர்க் கடந்த ஒள்வாள்
வேந்தர்கோன் முழவுத் தோண்மேல்
மாவகிர் நெடுங்கண் சூட்டு
மாலையே மாலை யாகக்
காவலர் முகங்கள் எல்லாம்
கமலமொத் திருந்த மாதோ. (67)

---

## போர்புரி படலம்.

தமயந்தி நளனுக்கே மாலை இட்டதால் பொறாமை கொண்ட இந்திரன் மற்ற அரசர்களைப் பார்த்துச் சொல்லுகிறான்:

விரிகதிர்ப் பரிதி முன்னர்
வெண்மதி மழுங்கும் அல்லால்
பரிதியும் மதியம் தோன்றில்
படர்ஒளி மழுங்கல் உண்டோ?

அரசர்காள்! நீவிர் வெய்யோன்
அருங்குலத் துதித்தும் திங்கள்
மரபின்மன் னவற்குத் தங்கண்
மாண்எழில் மழுங்கி னீரால். (68)

கண்டவர் மனமும் கண்ணும்
கவர்ந்திட வனப்பு வாய்ந்த
ஒண்டொடி மாலை வேய்ந்தோற்(கு)
உரியளென் றெண்ண வேண்டா;
திண்டிறல் நிடதர் கோமான்
செருவினில் இரியல் போக
மண்டமர் கடந்த ஒள்வேல்
மன்னவர்க் குரியள் என்றான். (69)

என்றலும், 'கடவுட் டிங்கள்
இருங்குலம் இழித்துக் கூறல்
நன்றாகன்' றென்ன நக்கு
நாமவேல் வழுதி சீறி,
'உன்றலை துணிப்பன்' என்று
ஒளிறுவாள் உறையின் நீக்கிக்
குன்றெறி வயிர ஒள்வாட்
குரிசின்மேற் கனன்று போனான். (70)

'வெருளலை அணங்கிற் காக
களனுருக் கொண்டு மேய
அகல்விசும் பளிக்கும் வேந்தன்
இவன்'என அமரர் கூறக்,

'துகளெழ மௌலி பண்டு
தோற்றவன் தன்னை வென்கோல்
இகலெனப் புகையும் ஒள்வாள்
உறை செறித் தேகினானே. (71)

இது நிற்க, இந்திரன் மொழிகளைக் கேட்ட அரசர்கள் தம்சேனைகளுடன் நளனை எதிர்த்தார்கள்.

கொள்ளை கொண் டோரி யுண்ணக்
குழாம் தொடு கவந்தம் ஆட
ஒள்ளழல் தறுகண் கூற்றம்
உயிருண்டு தெவிட்டி நிற்ப,
வெள்ளவெம் குருதி போர்ப்பி
வியன்பணை நிடதங் காக்கும்
வள்ளறன் புருவத் தோடும்
வரிசிலை குனிந்த தன்றே. (72)

கூன்பிறைக் கோட்டு வல்வில்
குழைத்ததும் குழைத்துந் தெவ்வர்
ஊன்சுவைத் துண்ணும் வாளி
விடுத்ததும் ஒன்ன லார்தம்
கான்படு தெரியல் மார்பம்
போழ்ந்ததும் தெரியக் காணார்
வான்படு பிணக்குன் றேங்கி
வயின்வயின் விளங்கக் கண்டார் (73)

நளன் கையம்பால் மன்னர் மடியக்கண்ட இந்திரன், இனி அப்போரை நிறுத்துமாறு நிடதனை வேண்டாதிருந்தால்,

உலகம் முழுதும் இன்றே அழியும் என்று எண்ணினான். எல்லாத் தேவர்களும் தமக்குரிய உருவத்துடன் நளன் முன் தோன்றிப் பேரரை நிறுத்தும் படி அவனை வேண்ட, அவன் அவரைத் தொழுது நின்றார். அப்போது தேவர்கள் வேண்டிய வரங்களை ஈந்து தம்மிடம் சேர்ந்தனர். நளனும் தன்னிருப்பிடம் புக்கான்.

## திருமணப் படலம்.

ஆற்று வேள்வி அருந்தவர் சூழ்வரப்
போற்று நான்மறைக் கோதமன் போர்கெழு
வேற்ற டங்கண் விளங்கிழை மனறனுக்
கேற்ற யாவையும் கொண்டுடன் எய்தினான். (74)

வேரி யந்தொடை வீமனும் வேந்தரும்
தேரு ரான்மனைச் செல்வரும் மன்றலுக் (கு)
ஒன்ற எய்திய தென்றுறை ஒற்றரால்
ஆர மார்பற் கறிய உணர்த்தினார். (75)

நளன் அணிபெற அலங்கரிக்கப் பெற்றான்.

தண்ணறுந் தாமரை தாக்கணங் கன்னவர்
கண்ணு நெஞ்சு முவந்து களிப்புற
எண்ணில் வேதியர் ஆசி இயம்பிட
வண்ண மாமணி மண்டபத் தெய்தினான். (76)

கள்ளு ருமலர் நாற்றிஎண் கால்வத்தும்
உள்ளு கன்ற ஒளிர்மணி மாடத்தின்
பிள்ளை மாணிகர் நோக்கியைப் பெய்கழல்
வள்ள லோடும் மணித்தவி சேற்றினார். (77)

உதக நல்குரல் ஓரை இலெதன
விதியின் நாடிக் கணிதர் விளம்பலும்
பதலே ஆர்த்தெழப் பாவையை நல்கிய
மதுமலர்த்தொடை மன்னவுந் தானரோ. (78)

கமல மீதுசெங் காந்தள் அலர்ந்தெனக்
குமரன் அங்கையிற் கோல்வளைச் செங்கைவைத்(து)
இமய மாதும் இறைவனும் போலவாழ்ந்(து)
அமைதிர் என்ன அரும்புனல் நல்கினன். (79)

நளன் தமயந்தி கைவிரல்களைத் தன் கையாற் பிடித்தான்.

பொங்கு செந்தழல் சூழ்வந்து பூம்பொரி
செங்கை ஆரச் சொரிந்து திருமகள்
பங்க யப்பதம் பைம்பொனின் அம்மிவைத்(து)
அங்கண் வானத் தருந்ததி காட்டினன். (80)

முருகு வாய்மடுத் தண்டளி முசுபூந்
தெரியல் மார்பினன் தேசிகர் தாடொழு(து)
உருகும் அன்பின் உவந்து விதர்ப்பர்கோன்
வரைகொள் மார்பம் மகிழ்வுறப் புல்லினன். (81)

கோதில் நான்மறைக் கோதமன் ஆதியாம்
மாதவத்து முனிவரும் மன்னரும்
காதல் வேலை கரையழிந் தோங்கிட
ஆதரத்தொடும் ஆசி இயம்பினர். (82)

வீமன், தன் மகளுக்கு வேண்டுவன எல்லாம் விருப்பொடு நல்கினன்.

அல்லியங் கமல நீங்கி
அரசரிற் புகுந்து வாழும்
மெல்லியல் பிரியல் ஆற்றா
விழைவொடு பலகாற் புல்லி
மல்லலம் தெரியல் வீமன்
மனைவியர் பலரும் மூழ்கி
எல்லையில் துயரி னோடும்
தனித்தனி இரங்கி னாரே. (83)

பெருந்துயர் உழந்து வாடும்
பிணை அனும் தம்மை நோக்கி
விரிந்தபூம் துளவி னோன்பின்
விரைமலர்க் கோதை ஏக
வருந்திமுன் உயிர்த்த தெண்ணீர்
மறிகடல் வருந்திற் றேவென்(று)
அருந்தவர்க் கிறைவ னான
கோதமன் ஆற்றி னானே. (84)

அன்னையர் அம்மெல் ஓதித்
தோழியை அருளின் நோக்கி
உன்னினும் இவள்மேற் காதல்
உளமென உரைக்கி லேமால்;
என்னினும் இன்று தொட்டு
இன்னுயிர்த் தோழி அல்லை,
மின்அனாட் கன்னை நீயே.
வேண்டுவ புரிதி என்றார். (85)

——

## மீட்சிப் படலம்.

மணம் கடைபெற்ற பிறகு நளன் மாவிந்த நகரத்துக்குப்புறப்பட நிச்சயித்துத் தன் மந்திரிகளைக்கூவி அவ்விஷயத்தைப் பரிவாரங்களுக்கு முரசுமூலம் அறிவிக்குமாறு கட்டளையிட்டான்.

அண்ணலம் குருதிவேல் அரசன் ஏவலில்
கண்ணகல் முரசெழு கடலின் ஆர்த்தெழ
எண்ணிட இடமிலை என்ன நேமிசூழ்
மண்ணக வரைப்பெலாம் மலிந்த தானையே. (86)

நிலவுவெண் கவிகைமேல் நிழற்றத் தண்மதிக்
கலைநிலாக் குவிந்தன கவரி காலசெய
மலர்தலை உலகெலாம் புரக்கு மன்னவன்
சிலையுலாம் தமனியத் தேரில் ஏறினன். (87)

கொடிகளும் குடைகளும் குழுமப் பல்லியம்
கடலுடைந் தாலெனக் கலங்கி யார்த்தெழ,
வடிகெழு குருதிவேன் மன்னர் சூழ்வர,
நிடதநா டடைந்தனன் நேமி வேந்தனே. (88)

---

## கலிதோன்று படலம்.

நளன்விஷயமிதுவர்க, இந்திரன் முதலியோர் விண்ணுலகுக்குச் செல்லுகையில் வழியில் கலிபுருஷனைச் சந்தித்தனர். கலிபுருஷனை இந்திரன் பார்த்து, ‘நீ எங்கே போகின்றாய்?’ என்று கேட்க, அவன், அக்கலியாணத்தைக் கேள்விப்பட்டு அவள்மேலுள்ள ஆசையால் அங்குச் செல்வதாய்க் கூறினன்.

என்றலும் அமரர்கோன் முறுவல் எய்தி அம்
மன்றலுக் கோதனி வந்த தீங்கெனு
வென்றிவேல் நிடதர்கோன் தனக்கு மென்றொடை
துன்றிருங் கூந்தலாள் சூட்டி னுள்என்றான். (89)

விண்ணவர் அனைவரும் வெள்கப் பூந்தொடை
மண்ணகத் தரசனுக் கணியு மாண்இழை
எண்ணமும் கெடுத்தவட் பிரிப்பன் ஈண்டெனுக்
கண்ணழல் கதுவவெங் கலியும் கூறினன். (90).

நளனையும் தமயந்தியையும் பிரித்துப் பிறகு அவளை அடைதல் தகாதகாரிய மல்லவா என்று தேவர்கள் கூறக் கேட்டும் கலி தன்னெண்ணத்தை மாற்றவில்லை. இனிஇவ னெடு பேசலாகாதென்று தேவர்கள் போய்விட்டார்கள்.

மல்லலம் பழன வேலி வளங்கெழு நிடதநாட்டில்
அல்லனுற் றரிதிற் செல்லும் கொடுங்கலி யமரர் வேட்ப
எல்லையில் வேள்வியாற்றி அருமறைபயில்வோ ரெங்கும்
சொல்லியபதங்கள்கேட்டுத் துணிப்பதம் பெயர்த்திலானே

நிழல்சுளிகளிநல்யானை நிடதர்கோன் மகிழ்ச்சி கூர்ந்து
பழமறைக்கிழவர்யாரும் பரிவொடு கவர்ந்து கொள்ள
விழுநிதி பழனநாடு வேண்டுப வெறுப்ப நாளும்
பொழிதருபுனலீந்திப் போக்கரிதென்னநின்றான்.

கடிமனை இடங்கள் தோறும்
கற்புடை மகளிர் ஈட்டம்
கொடிநெடு வீதி எல்லாம்
கடவுளர் விழவு துன்று

நெடிபடு கான முற்றும்
திறந்துளோர் நெருங்கி யாண்டும்
அடியிடல் அரிதென் றெண்ணி
அல்லலுற் றகன்று போனான். (93)

இந்நகர் வரைப்பில் யாண்டு
மெய்துதற் கரிதென் றெண்ணிச்
சென்னிவான் றடவு தெய்வச்
செழுமலர்ச் சோலை புக்கு
மன்னவன் இழைக்கும் தீமை
யாதென மனத்தின் ஓர்ந்து
துன்னரும் தான்றி மீதில்
சூழ்ச்சியோ டிருந்தான் மாதோ. (94)

## போது கொய் படலம்.

இச் சமயத்தில் இளவேனிற் காலம் வந்துற்றது. மாவிந்தத்திலுள்ள ஆடவரும் மாதரும் மலர் கொய்யச் சென்றனர்.

வஞ்சி நுண்ணிடை மாதர் மிதித்ததில்
செஞ்சவே தளிர் ஈன்ற செயலைகள்
அஞ்செஞ் சீறடி தோய்ந்த அரக்கெறி
பஞ்சி யுண்டொளிர் பான்மை கடுக்குமே. (95)

மாங்கு யிற்குரல் கேட்டு மலருறுக்
கோங்க மாதர் குதலையைக் கேட்டலும்
தேங்கொள் போது சினைதொறும் பூத்தலால்
ஆங்க தற்கிணை யோகுயில் ஆர்ப்பதே. (96)

கோதை மார்பனொர், கோல்வளை காதினின்
மாதர் நீலம் புனைதலும், மாற்றவள்
நோத கும்படி நோக்கிய நோக்கவள்
காதி லும்புனை காவி கொர்ந்தவே. (97)

---

## புனல் விளையாட்டுப் படலம்.

மங்கையர் செறிதலுங் மல்கு நீரிடைப்
பங்கயச் செழுமலர் தாழ்தல் பாவையர்
திங்கள்வாண் முகத்தெழிற் குடைந்து தேங்கமழ்
பொங்குதண் புனலிடை யொளித்தல் போலுமால்.(98)

துன்னிரும் கூந்தலார் தூர்ந்த தாரைகள்
மன்னவன் றோள்களில் பாய்தல் வானிடை
மின்னினம் காரொடு மிடைந்து மென்புனல்
பொன்னெடுங் குன்றின்மேல் பொழிதல் போன்றதே.

விரைகமழ் சுண்ணமும் வீசு சாந்தமும்
அரசனுண் டெறியலும் ஆற்ற லாமைபால்
குரைகடல் குளித்திடு மின்னிற் கோதையர்
உரவுநீர் வாவியில் ஒளித்திட் டாரரோ. (100)

---

## சூதாடு படலம்.

கோவடு குருதி வேலான் கொழுஞ்சுடர் பட்ட காலை,
சேவடி கழுவ லின்றிச் செய்கடன் கழித்த லோக்கிக்,
காவலற் சேரும் காலம் கருதிப்பு புன்னி ராண்டு
மேவரு தான்றி யுற்ற வெங்கலி மேயி னானே. (101)

விட்புலத் தரசரும் ஏனை வேந்தரும்
வட்கவிம் மன்னவன் மல்லல் மார்பகம்
பெட்புறு மடந்தையைப் பிரிப்பன் யானெனப்
புட்கரன் பாற்கலி போயி னானரோ. (102)

வாட்டிறல் வேந்தனை மடந்தை தன்னொடும்
காட்டிடைப் புகுத்திமன் காக்கு மன்னருன்
தாட்டுணை தொழுநரும் தாம நீண்முடி
சூட்டுவன் நினக்கெனச் சொல்லி னானரோ. (103)

எண்ணலை யாதுநான் இழைத்த வஞ்சனை
விண்ணவ ராயினும் விலக்கற் பாலரோ
அண்ணலைச் சூதினாற் படுப்பல் அஞ்சனீ
கண்ணுறும் யான்கொடும் கலியென் றானரோ. (104)

கலைகணா தாகியோர் கவிகை நீழலில்
வளைகடல் உலகெலாம் புரக்கு மன்னவன்
தளையவிழ் தாமரைத் தாளில் வீழ்ந்தெழும்
இளவலோ டளவிளர் யிருக்கும் அவ்வையில். (105)

கொல்சின வாகைவேற் குரிசில், 'மல்லலேற்(று)
எல்லுமிழ் மணிக்கொடி உயர்த்ததென்?' என
வல்லடு சூதினில் எற்ற மன்னரை
வெல்கொடி ஈதென விளம்பி னானரோ. (106)

சொல்லிய அவ்வுரை கேட்டுத் தூமணிக்
கல்லெனப் பணைத்துயர் கலவைத் தோளினான்
வெல்கொடி உயரிய விடலை சூதினி
வல்லையேல் ஆடுதும் வருகென் றேகினான். (107)

நஞ்சினிற் கொடியவன் புணர்ப்பின் நம்மிறை
வஞ்சகச் சூதினின் பணம்வைத் தானென
அஞ்சினர் அமைச்சர்அவ் அரசர் கோமகன்
செஞ்சரண் தொழுதிவை செப்பல் மேயினர். (108)

கள்ளுண விரும்புதல் கழகம் சேர்தல்மால்
உள்ளுறப் பிறர்மனை நயத்தல் ஒன்னலர்க்(கு)
எள்ளரு ஞாட்பினுள் இரியல் செய்திடல்
வள்ளியோய்! அறநெறி வழுக்கும் என்பவே. (109)

ஐயநீ ஆடுதற் கமைந்த சூதுமற் ற
எய்துநல் குரவினுக் கிலையந்த தாதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை என்பர் மேலையோர். (110)

என்னுக சூதினை இகலி வென்றதூஉம்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற அமைத்திடும் உண்மை யோர்கிலாப்
புள்ளினம் அருந்தின போலும் என்பவே. (111)

கலைக்கடல் கடந்துளார் கழறும் கட்டுரை
சிலைத்தழும் பிருந்ததோட் செம்மல் கேட்டுயிர்
உலப்பினும் மறக்கிலேன் உரைத்த வாய்மைநீர்
விலக்குவ தென்னென விளம்பி னானரோ. (112)

மன்னனி யைந்தவை மறுக்கி லீரென
இன்னிலுற் றமைச்சரண் டிருப்ப வெங்கலி
துன்னிய தானும்வீழ் தூர்ந்த வாற்றினும்
முன்னரும் சூதினின் முயல்கின் றனரோ. (113)

நிழலுமிழ் வயிரவா ணிடத்தர் கோமகன்
ஒழுகொளிப் பூணினாய்! ஒட்டம் யாதென
மழவிடை யதனையான் வைப்ப னீயுமுன்
எழுகடன் ஞாலமு மியைக என்றனன். (114)

சூழ்வினைப் புணர்ப்பினாற் சொன்ன வாறியைந்(து)
ஆழ்கடற் புவிதொழும் அரச னுடனெவம்
காழ்மனக் கொடுங்கலி கவற்றின் வண்ணமாய்
வீழ்தலும் புட்கரன் வென்றிட் டானரோ. (115)

அனைத்தையுந் தோற்றனை அருவி பாய்கவுட்
சினக்களி மால்களி றனைய சீற்றத்தோய்!
மனத்திடை நினைக்குவ தென்னை வல்லைநின்
புனக்கொடிக் கியைந்தினிப் பொருதும் யாமென்றான்

---

## நகர் நீங்கு படலம்.

என்றலும் முறுவலித் திசைக்க லாதனை
ஒன்றுமீ ளுரைத்திடல் உலங்கொள் தோளினாய்!
வென்றநின் நகர்வயின் மேவ லேன்எனாத்
துன்றுகா னகஞ்செலத் துணிதன் மேயினான். (117)

எண்ணிவந் திறைஞ்சிய எதிர்த்தொம் பன்னவள்
மண்ணிய மதிநிகர் வதனம் நோக்குறுப்
புண்ணுழை வேலெனப் புகுந்த யாவையும்
நண்ணலர்க் கடந்தவே னம்பி கூறினான். (118)

தாழ்தடக் கையினன் இன்ன சாற்றலும்
வீழிவாய் மடமயில் வெய்து யிர்ப்பொடு
மாழ்கினள் வருந்தினள் மழைக்கண் நீருகுத்(து)
ஊழ்வலி இதுவென உள்ளம் தேறினள். (119)

இந்திர சேனனென் றிசைக்கும் பேருடை
மைந்தனும் மழலைவாய்க் கொடியும் மாழ்குற(து)
உய்ந்திடக் கொண்டுபோ ரோசை போயநின்
தந்தைதன் வளநகர் சார்க வென்றனன். (120)

உயிர்நிகர் மக்களோ(டு) உலங்கொள் தோளினன்
செயிரறு தந்தைபால் செல்கென் றோதலும்
புயனறும் கூந்தலாள் புண்ணி னாடெரி
அயினுழைந் தாலென அலமந் தேங்கினள். (121)

நெடிபடு கானிடைத் தமியை நீங்கிப்போய்
படுபால் அமளிமேல் பள்ளி கொள்ளவெங்
கடிநகர் அடைந்துமெல் அணையிற் கண்படில்
அடியனேற் கிதனினும் அறமுண் டாங்கொலோ ()

பொற்பினுக் குறையுளாம் பொன்னங் கொம்பனாய்!
அற்பினிற் பயந்தநம் மக்கள் ஆமிடை
எற்பிரிந் துறைகுந ரேனும் எங்ஙனம்
நிற்பிரிந் தாற்றுவர் நிகழ்த்து வாய் என்றான். (123)

'கூற்றுறழ் குருதிவேற் குரிசில்! மக்கடாம்
ஆற்றினும் ஆற்றலர் தனரின் மூழ்கினும்
மாற்றருங் கற்பினர் மகிழ்நர் கான்செல
வேற்றுநா டுறைவது விழுமி தோ?' என்றாள். (124)

கோற்றொடி! செல்வர்பாற் குறையி ரந்துநின்(று)
'எற்றயின் றுயிர்சுமந் திருத்தல் ஈறிலா
ஆற்றலும் மானமும் அறிவும் கல்வியும்
மாற்றரும் சீர்த்தியும் மாற்றும்' என்பவே. (125)

மிக்கவெம் சமத்திடை வெருவி ஓடினர்
ஒக்கறுன் புறத்தனி உலகில் வாழுநர்
புக்குவேட் டகத்தினில் உண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே.' (126)

என்றலும், 'திருவுளம் இன்ன தாகுமேல்
மன்றலம் தெரியலாய்! மக்க டம்மைநம்
மின்றிகழ் மானவேல் விதர்ப்பர் மாநகர்
சென்றிடப் பணித்தருள்' என்று செப்பினாள். (127)

கண்டலில் பாகனை நோக்கித் தாதுசேர்
வண்டிமிர் தெரியலான் வருந்தி, 'மக்களை
விண்டொடு புரிசைசூழ் விதர்ப்பன் தன்னுழை
கொண்டனை போ'கெனக் கூறி னானரோ. (128)

மடவரல் தன்னையும் மதுகை வேந்தையும்
படுதுயர் ஒழிகென ஆற்றிப் பாகனுங்(கு)
உடலுயிர் பிரித்தென உவகை மக்களைக்
கொடுநெடுந் தேர்மிசைக் கொண்டு போயினான். (129)

சிலதியர் பரப்பிய தேங்கொள் மெல்லிதழ்
மலர்மிசை மிதிப்பினும் வருந்து சீறடி
நிலமிசைப் படுவான் உறைப்ப நேரிழை
புலவுவேற் காளையின் தொடர்ந்து போயினாள். (130)

மடவால் தன்னொடு மதுகை வேந்தனைக்
கடிமுர சருதகோ மறுகிற் காண்டலும்
இடியுறும் அரவெனா ஏங்கி ஏங்கிநின்(று)
உடல்வெறுத் துயிருகீ உழல்கின் றார்சிலர். (131)

மண்ணிய மணிவரை அனைய மார்பினன்
பெண்ணலம் கனிந்தஇப் பேதை தன்னொடு
நண்ணரும் கானிடை நடத்தல் காணவோ
கண்ணினைப் படைத்தனன் கமலத் தோன்?” என்பார்.

அடிதொழும் அரசரும் அமைச்சர் வெள்ளமும்
மடவியர் அனைவரும் மைந்தர் ஈட்டமும்
கொடிநெடு வீதிவாய்க் குறுகி எங்கணும்
கடன்மடை திறந்தெனக் கலுழ்ந்திட் டாரரோ. (133)

மன்னவன் ஏகுதற் கிரங்கி மிழ்குநர்
துன்னரும் கானிடைத் தொடர்ந்து செல்குநர்
இன்னுயிர் செகுப்பலென் றிசையில் புன்மையோன்
அந்நக ரிடைமுர சறைவித் தானரோ. (134)

வருந்திமுன் போதிரும் அமைச்சர் வாண்முகம்
புரிந்தனன் நோக்கிய பொருவில் வாய்மையான்
‘விரிந்தநூல் கேள்வியீர்! அறத்தை வேரொடும்
அரிந்தனிர் எற்பிரிந் தாற்ற லாமையால். (135)

மேவருஞ் சூதினில் தோற்ற மேதினி
யாவதும் வென்றல தாள எண்ணுதல்,
கோவியல் பன்றவன் ஆணை பேற்கொடு
நீவிரென் வாய்மையை நிறுத்து வீர்’என்றான். (136)

முளரியால் வெந்தவெங் கானின் மொய்துகள்
அளியேயொடு புலம்பினர் அழுத கட்கடைத்
துளியினில் அவித்தனர் தொடர வெந்திறல்,
களிமதக் களிற்றினன் கானின் ஏகினன். (137)

நளன் சென்றவழி அவன் பிரஜைகளுக்குத் தோன்றாத வாறு கலிபுருஷன் ஒரு மாயமூண்டாக்கினன்.

தேடினர் புகுமிடம் தெரிய லாமையில்,
வாடினர் அருநெறி மருங்கின் ஓர்வழி
கூடினர் இன்னுயிர் கூற்றம் கைக்கொள
வீடினர் ஆமென வீழ்ந்து விம்மினர். (138)

பாவலர் இழந்தனர் பரிசில் உண்பலி
தேவரும் இழந்தனர் கலியின் தீமையால்
காவலன் கெடிபடு கானில் ஏகலால்
யாவரும் இழந்தனர் இன்பம் என்பவே. (139)

அறந்தலை மயங்கின; பொய்ம்மை ஆர்ந்தன;
மறந்தலை எடுத்தன; தீமை மல்கின,
திரம்பின மனுநெறி; தவங்கள் தீர்ந்தன;
நிறைந்தன வஞ்சனை நேமி எங்குமே. (140)

## கான்புகு படலம்.

ஆயிடை உயிர்நிகர் அணங்க னோடு
மேயதன் நகர்வயின் விசும்பு போழ்ந்துலாம்
காய்கதிர் நுழைகலாக் காவின் ஆடல்போல்
போயினன் அழலுமிழ் புலவு வேலினன். (141)

வாவியின் மருங்குநன் மணிகள் கோத்தெனத்
தூவியம் பொற்சிறைத் தமன்புட் டோன்றலும்
ஓவியர் எழுதரும் உருவப் பைங்கொடி
காவியங் கண்ணிணை களிப்ப நோக்கினள். (142)

'மற்றுமோர் உயிரென வளர்ந்த பூவையும்
சொற்றரு கிள்ளையும் மறப்பத் தூமணிப்
பொற்றடம் தோளினாய்! பொன்னம் புள்ளினைப்
பற்றிநீ தரு'கெனப் பணிந்து கூறினள். (143)

உடனே இருவரும் ஓராடையை உடுத்துக் கொண்டு மற்றொன்றால் அவ்வன்னத்தை அரசன் கைப்பற்றப் போக, அக்கபடப் பக்ஷி துகிலொடு பறந்து போயிற்று. அதனைக் கண்டு அரசன் மனமாழ்கி வினைப்பயனாலிது நிகழ்ந்ததென எண்ணினான். தமயந்தி நடந்துவருதலால் ஆகிய துன்பத்தை ஆற்றாதவனாகி, குண்டினபுரத்துக்குச் செல்லும் வழியை அவளுக்குக் காட்டி, அதன் வழியே போகச் சொன்னான். தமயந்தி அவ்விதம் செய்ய மறுத்தனள். அச்சமயம் சூரியன் அஸ்தமித்தனன். அவர்கள் ஒரு பாழ்மண்டபத்தைச் சேர்ந்தனர்.

வளைகடல் உலகினின் மன்னர் தாள்தொழ
உளையரிப் பீந்தவி சுறையும் எம்பிரான்
முளரியால் எங்கணும் மூற்று மண்டபத்(து)
எளியர்போல் இருந்திகொல் என்று விம்மினள். (144)

தடங்கணீர் துடைத்துமெய் தைவந் தாயிழை
நடுங்கலென் றாற்றிட நள்ளி யாமத்து
மடங்கல்போல் மொய்ம்புடை மன்னர் மன்னவன்
கொடுங்கைமேல் துயின்றனள் பொன்னம்கொம்பனாள்.

## பிரிவுறு படலம்.

நண்ணருங் கானெலாம் தொடர்ந்து நண்ணுமேல்
கண்ணினால் இவடுயர் காணல் ஆவதோ?
பெண்ணருங் கலத்தினைப் பிரியிற் றந்தையூர்
அண்ணிய தவ்வழி அடைந்து வைகுமால். (146)

விரிமலர்ப் பூங்குழல் விழிக்கில் ஈங்கிவட்
பிரிகுவ தரிதினிப் பிரிய எண்ணிலோ
ஒருதுகில் ஆயதித் துகிலை ஊறுசெய்
கருவியிங் கேதெனக் கருத்தின் எண்ணினான். (147)

அப்போது கலி, அங்கோர் வாளாக நளன் முன் வந்திருக்க அதைக் கொண்டு, அவன் அத்துகிலை அரிந்திட்டான்.

சில்லரி நெடுங்கணாள் தெருளா ருவகை
மெல்லெனக் கொடுங்கையின் நீக்கி வெய்துயிர்த்(து)
ஒல்லையில் உயிர்விடும் உடம்பு போன்மென
அல்லலம் கடலிடை அழுந்தி னானரோ. (148)

ஆயிடை இன்னணம் வருந்தி அன்புகூர்
வேயுறழ் தோளியைப் பிரிந்து வெஞ்சின
மாயவெங் கொடுங்கலி வயத்த னாகலில்
போயினன் பித்தரில் பொருவில் வாய்மையான். (149)

தமந்தி விழித்தெழுந்ததும், நளனைக் காணாமல் துன்பக் கடலில் ஆழ்ந்து பலவாறு புலம்பினாள்.

"நோலார் போனோற்றே! நிடதத்தார் கோமானே!
ஆரவரை மார்பா! அளியேன் உயிர்க்குயிரே!
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றும்
சாலையால் இன்னும் இதுவோ நின் தண்ணளியே?

மன்னவனே! இப்பிறவியில் உன்னைக்கண்டு மணந்திலனேல், இன்னுமொருபிறப்பிலாயினும், நான் தவம்செய்து உனக்குமனைவியாவேன்.

"வாவும் இளமான்காள்! மயில்காள்! மடப்பிடிகாள்!
கூவும் கரிய குயில்காள்! மென் புள்ளினங்காள்!
ஆவிஎன மேவி 'அகலேம்' எனவகன்ற
காவலன்றான் போன வழிஎனக்குக் காட்டீரோ?" (151)

என்றிவ்வண்ணம் புலம்பிக்கொண்டு காட்டில் அலைகையில், தமயந்தியை ஒருபாம்பு விழுங்கிற்று. அங்குவந்த ஒரு வேடன் அதனைக் கொன்று அவளுடைய உயிரைக்காப்பாற்றினன். பிறகுபலதுன்பங்களையும் சகித்துக் கொண்டு,நடந்து போய்ச் சேதி நகரத்தைத் தமயந்தி அடைந்தாள்.

துணிபட் டொழிந்த மென்துகிலும்
சுடர்விட் டொளிர மணிநுதல்
மணியில் தோன்றி மாசடைந்த
வடிவும் விரிந்த வார்குழலும்
பிணியுற் றழிநெஞ்சுமாய்ப்
பித்தேறினர்போற் கோமறுகில்
அணுகச் சேதி பதிதாய்கண்(டு)
ஆர்கொ லிவளென் றையுற்றாள். (152)

ஐயுற்று அவளை அழைத்துவரச்செய்தாள்.

வந்த மடமான் முகநோக்கி
'வரிவண் டூதப் பொதியவிழ்ந்த
அந்தண் கமல மலர்வகற்றி
அழகு வாய்ந்த முகம் பசப்பச்

சிந்தை தளர்ந்து தனிப்போதற்
    குற்ற தெவன்கொல் சேயிழையாய்!
உந்தை யார்?உன் தலைவனெவன்?
    உன்பேர் யாதிங் குரை! என்றாள். (153)

'வீமன் புதல்வி, புகழ்படைத்த
    வேந்தர் கோமான் மனைக்கிழத்தி,
நாமம் பகரில் தமயந்தி'
    என்பாள் தன் கோன் நண்ணலற்குக்
காமர் நிதியும் வளநாடும்
    சூதின் இழந்து கானிடைப்போய்
யாமம் தனின்மற் றவட் பிரிய
    அவளைத் தேடி ஈண்டணைந்தேன். (154)

அனைய மடமான் உயிர்த்தோழி
    யான்என் றுரைப்ப அகமகிழ்ந்து
'தனியள் ஆகிக் கடுங்கானில்
    தலைவன் பிரியத் தளர்ந்தேங்கும்
கனைவண் டிமிரும் கருங்குழலைக்
    காணும் அளவும் இந்நகரில்
இனையல் வாழி இருத்தி'யென
    இசைந்தாங் கவளும் இருந்தனளால். (155)

---

## வேற்றுரு வமைந்த படலம்.

கள்ளு யிர்க்குமென் மலர்க்குழல் காமர்பூங் கொடியை
நள்ளி ருட்பொழு தகன்றனன் நண்ணரும் கானில்
தள்ளு தற்கரும் துயரொடு போதலும் தழலும்
ஒள்ளழற்புகைக் கொழுந்தெழக் கண்டனன் உரவோன். (156)

செஞ்சு டர்ச்சிகை வளைதலில் தெருமரல் எய்தி
நஞ்சு யிர்க்கும்வாள் அரவொன்று 'நாமவே லிறைவ!
தஞ்ச நீஎனை அளித்தி'யென் றுரைத்தலும் தாழா(து).
அஞ்சல் அஞ்சலென் றடைந்தனன் மடங்கலேறனையான். (157)

கனைசெ ழுஞ்சுடர்க் கொழுங்கனல் படர்தலிற் கரிந்து
பனைம றிந்தெனக் கிடந்ததோர் பாந்தளை நோக்க
வனைபொ லன்கழற் குரிசிலோர் மறையவன் முனிவால்
நினைவினும்தனிப்பெயர்ந்திடு நிலைமையோன் றிலனால். (158)

அழலி னின்றெடுத் தையிரண் டடிப்புறத் தகற்றின்
முழுவ லன்பொடு நன்கிழைக் குவலென மொழிந்து
தழற்கட் பாம்புடல் சுருக்கலும் தழலருள் வரத்தால்
எழுவின் நீள்கரத் தால்எடுத் தழற்புறத் திட்டான். (159)

கதமெ ரிக்கணின் றகற்றலும் கதிரொளி விரிக்கும்
அதிர்பொ லன்கழல் அரசர்கோன் மெய்யுறத் தீண்டி
முதிர்சி னத்தவா ளரவுதன் முன்னுரு வெடுப்ப,
விதிர்கு லத்துயர் வேந்தனும் வேற்றுரு வண்மந்தான். (160)

கருணை செய்தெனைப் புரந்தநிற் கடித்தது முன்னை
உருவு கண்ணுற்றில் ஒன்னலர் செகுப்பரென் பதனால்
பொருவி லேரய்! இனி வாகுவன் எனும்பெயர் புனையா
இருதுபன்னன்வாழ் அயோத்திமாநகரினே குதியால். (161)

வந்தல் எகியம் மன்னவன் சூதனா இனைந்து
கூந்தன் மாவுளம் தெரிதரு விஞ்சைநீ கொடுப்பின்
ஆய்ந்த சூதுவெல் விஞ்சைநின் பாலவன் அளிக்கும்
சாந்த மெல்லியல் தமயந்தி தன்னொடும் சார்வாய். (162)

பின்னர் மன்னநின் பெருநிலக் கிழமையும் பெறுதி
முன்னை மாணுரு வெளிதினில் பெற்றிட முன்னில்
இன்ன பூந்துகில் புனைதியென் றிருதுகில் அளித்துத்
தன்னுருக்கொடு போயது தழல்வீழிப் பாந்தள். (163)

நளன் அங்கிருந்து புறப்பட்டுக் கடற்கரை சார்ந்து அங்குள்ளவற்றையும், தான் மனைவியை விட்டுப் பிரிந்து தனித்திருக்கும் நிலைமையும் எண்ணிப்பலவாறு வருத்தமுற்றான். பிறகு நடந்து சென்று அயோத்திபோய்ச் சேர்ந்தான்.

இருது பன்னனைக் காண்டலும் 'எத்தொழில் வல்லை?
மருவு நாமமென்?' கூறென, 'வாகுவ னென்பேர்
உருவ வாம்பரித் தேரினி தூர்குவன் உம்பர்
அருமருந்தென அடுதொழில்புரிவன்' என்றறைந்தான். (164)

வேந்தன் அவ்வுரை கேட்டலும் 'வியன்மணிநெடுந்தேர்
கூந்தல் மாவுளம் அறிந்தனை குறிப்பினுர் குதியேல்
ஆய்ந்த செம்பொனோர் ஆயிரம் வைகலும் அளிப்பல்,
வய்ந்தஎன்னிரு பாகரோ டிருத்தி'யென் றிசைத்தான். (165)

அன்ன வாறுநேர்ந் தலங்குளைப் புரவிமன் தேர்க்கு
மன்னன் ஆகிய நிடதர்கோன் வைகலும் புலம்பித்
'துன்னு கானிடை நீத்தவள் துயரமீக் கூர
என்னள் ஆயின ளோ?' என இரங்கிவெய்துயிர்ப்பான். (166)

---

## வீமன் தேடவிட்ட படலம்.

இனையன் ஆகிய மன்னவன் இவ்வழி இருப்ப
வனைக ருங்கழல் விதர்ப்பர்கோன் மறையவர்க்கழைபன்
தனையை தன்னொடு களனையும் தேடிநீர் தந்தால்,
நினைவு யாவையும் தருகுவன்'என அவர் நேர்ந்தார். (167)

## கலி நீங்கு படலம்.

என்று கூறிய அந்தணற் கிருநிதி வழங்கி
'நன்று நின்னுரை; இன்னரு மயோத்தியி னண்ணி,
பன்றல் மாலைவேல் இருதுபன் னற்குளம் மகிழ்வ(து)
ஒன்று கூறுவ தாள்' தென விரைந்தல்மே யினனால்; (178)

'நாட்டம் மூன்றுடை நாயகன் வரத்தினு னங்கை
மீட்டுங் கன்னிகை ஆயினள்; சுயம்வரம் விழைந்தாள்;
கேட்டு மாநிலக் கிழவரும் அவ்வுழி இறுத்தார்;
பூட்டு வார்சிலை மன்னநீ போதியேற் போவாய். (179)

நாளைநன்மணம் புணர்வது நிடதநா டளிக்கும்
காளையாருயிர்உளன்கொலோ?கழிந்தனன்கொல்லோ?
ஆளிமொய்ம்பினாய்!' என்றுநீ அறைகென அறைந்தாள்;
வாளை வென்றரி பரந்துழை தோய்ந்தகண் மடவாள். (180)

பிராமணன் அயோத்தி அடைந்து இவ்விஷயத்தை இருது பர்னனுக்கு உரைக்க, அவன் வாகுகனைப்பார்த்துச் சொல்லுகிறான்.

'தளருந்தண்ணிடைத் தமயந்தி சுயம்வரம் நாளை
உளைவ யப்புசும்புரவியி னுள்ளமோர்ந் தனையேல்
தெளியும்கேள்வியாய்!விரைவினிற்செலுத்துகதேர்என்(று)'
அளிமு ரன்றுழுபந் தேனுகர் தாரினா னறைந்தான். (181)

கேட்ட வாகுகன் கிளியென மிழற்றுந்தீங் கிளவி
காட்டுள் நீத்தன நினைத்தன னாயினும், கற்பு
நாட்டு கின்றவள் இத்திறம் புரியுமோ? நம்மைக்
கூட்டு தற்கிது நினைத்தனள் ஆமெனக் குறித்தான். (182)

நொறில்வ யப்பரித் தேர்பண்ணி நொய்தினிற்கொணரா
'வெறுழ்வ லித்தடந் தோளினாய்! தேர்மிசை இவரின்
நறும லர்ப்பசும் பூந்தொடை விதர்ப்பர்கோ னாட்டில்
உறுவ லிப்பகல் கழிவதன் முன்' என உரைத்தான். (183)

என்று சொன்னவுடன் ருதுபர்ணன் தேரில் ஏறிக் கொள்ளப், பார்ப்போர் யாவரும் அதிசயிக்குமாறு நளன் மனவேகத்திலும் விரைவாய்ச் செல்லும்படி குதிரைகளை விடுத்தான்.

முத்த வெண்குடை வேந்தர்கோன் முழவுறழ் தடந்தோள்
உத்த ரீயமந் நெறியிடை வீழ்ந்தது முணர்ந்து
'தத்து வாம்பரி நிறுவியத் துகில்தரு' கென்னப்,
பத்து யோசனை கடந்தது தேரெனப் பகர்ந்தான். (184)

தான்றி மாமரம் தோன்றலும், தேரினைத் தகைத்துத்
தோன்று மிம்மரத் திலைகளும் தொக்கமென் பழமும்
மூன்று கோடியே முப்பதிற் றிரண்டென மொழிய
ஆன்ற கேள்வியோன் எண்ணியற் றமைவியந்தான். (185)

'இனைய விஞ்சைமற் றெனக்குநீ அளித்தினை என்னில்
துணைவ யப்பரி உளமுணர் விஞ்சையான் சொல்வன்;
வனைபொ லன்கழல் மணிமுடி மன்னன்!' என் றுரைப்ப
அனைய விஞ்சையை வாகுகற் களித்தனன் அன்றே. (186)

இருது பன்னனவ் விஞ்சையை வாகுகற் கீய
மருவி நின்றனன் கலிதனுந் தேகிவாள் அரவின்
எரிசெய் வெவ்விடம் கான்றலின் இதயநெக் குருகி
வெருவி வாய்விடா விடத்தினை உமிழ்ந்தனன் அன்றே. (178)

தணந்த வெந்திறல் கலியனைச் சபிக்குவன்' என்னுக்
கணங்கொள் வண்டிமிர் தாரினுன் உளத்திடைக் கருதல்
உணர்ந்த வெங்கலி தமயந்தி உரைத்தசா பத்தால்
அணங்க ராவுமிழ் விடத்தினுல் இன்றள வயர்ந்தேன். (188)

இழைத்த தீவினை தணிந்தனன் இன்றுதொட் டுன்பேர்
வழுத்தி னுரையும் மருவலன் மன்ன!'வென் றேத்த,
அழற்கொ டுஞ்சினம் தணிந்தனன் ஆடல்வே லரசன்
குழைத்த தான்றியில் ஏறினன் கொடியவெங் கலியே (189)

---

## தேவியைக் கண்ணுற்ற படலம்.

நளனும் ருதுபன்னனும் குண்டினபுரம் அடைந்தனர். வந்த வாகுகன் நளனென்னத் துணிய எண்ணிய தமயந்தி, பல வழிகள் தேடினள்: முதலில் தன் தோழியை அவனிடம் அனுப்பினள். அவள் அவனிடம் போய், 'நீயார்? எத்தொழிலில் வல்லவன்? இங்கு எதற்காக வந்தாய்?' என்று கேட்டாள்.

'விரிம லர்க்குழல் தமயந்தி சுயம்வரம் வேட்ட
இருது பன்னன்மா தேர்விடும் வாகுவன் என்பேர்;
புரிவல் வெந்தழல் இன்றியும் மடைத்தொழில்; புனலற்(று)
உருகு பாலையில் தீம்புனல் தருவல்'என் றுரைத்தான். (190)

அப்போது தோழி 'ஐய! இவ்வித்தைகள் நளனன்றி வேறெவர்க்கும் தெரியாது. அவனிடம் நீ இவற்றை அடைந்தனைபோலும்; அம்மன்னன் எங்கு வாழ்கிறான் என்பதைச் சொல்' என்று கேட்டாள். அதற்கு வாகுவன் 'நான் நளனிடத்தில் இவ்வித்தைகளைக் கற்கவில்லை. அவன் இருக்குமிட

றும் எனக்குத் தெரியாது. அவனைக் காணாத விடத்து கற்புள்ள தமயந்தி வேறொரு கணவனை அடைய எண்ணலாமா?" என்றான். இதனைக் கேட்ட தோழி, தமயந்திபாற் சென்று 'வாகுவன் பேசுவதைப் பார்த்தால் அவன் நளன்போற் காணப்படுகிறான்' என்று கூறி, தமயந்தி கொஞ்சம் அரிசி கொடுத்தனுப்பி அக்கினி இல்லாமல் அதனைச் சமைக்கும்படி அவனிடம் அனுப்பினாள். அவள் திரும்பி வந்து அவன் அப்படிச் செய்ததைத் தெரிவித்தாள்.

அழலு நீருமின் றமிழ்தென அடுதொழில் தேட்டுக்
குழையு நெஞ்சினள் இன்னுயிர்க் கொழுநனென் றெண்ணி
விழைவி னோடுதன் மக்களை அவனுழை விடுத்தாள்
மழலை மென்மொழிமக்களும்மன்னன்மாட்டடைந்தார். (191)

அடைந்த மக்களைக் காண்டலும் அழிவிடு மெழுகின்
உடைந்த துள்ளநீர் ஊற்றிருந் தொழுகின நெடுங்கண்;
தொடர்ந்த மும்மல முருக்கிவெம் பவக்கடல் தொலையக்
கடந்து ளோர்களும் கடப்பரோ மக்கண்மேற் காதல்? (192

மழலை மென்மொழி மக்களைக் காண்டலும் மன்னன்
அழுது துன்புறல் ஆய்வளைத் தோழிகண் டேகித்
தொழுது சொற்றலும் கொழுநனும் என்பது துணிந்து
முழுவலன்புடைத்தாயொடுதந்தைபால்மொழிந்தாள். (193)

மழைத்த டங்கணாள் மன்னவன் பணியினில் வேந்தை
அழைத்தி வம்'என ஆய்வளைத் தோழியை விடுப்பக்,
குழைத்த பூங்கொடி அன்னவள் வாகுவற் குறுகித்
தழைத்த காதலால் வருகென மன்னனும் சார்ந்தான். (194)

மறுவில் கற்பினள் மீனவேல் மன்னவன் வாழும்,
குறைவில் அன்பினள் பிழையிலள் கண்படை கொள்வாள்
இறையும் நீப்பரும் மனைவியை இருள்படு கானில்
அறனி ழுக்குறு நளன்அல தியாவரே அகல்வார்? (195)

என்று தமயந்திகூறக் கேட்டு வருந்திய நளன் தான் கலிவயத்தனாய், அக்காரியம் செய்ததாய்க் கூறி அதற்காக வருந்தாதவாறு தேற்றினன். பிறகு இரண்டாம் சுயம்வரத்தின் வரலாற்றை அவளை வினவி உணர்ந்தான்.

'முன்னை நல்லுருக் காட்'டென முற்றிழை மொழியப்
பன்ன கத்திறை உதவிய பூந்துகில் பரிவால்
மன்னர் ஏறனான் புனைதலும் மாறுரு வெய்திக்
கன்னல் வேளினும் கவினலம் கனிந்திட நின்றான். (196)

தமயந்தி அவனைக் கைகூப்பி வணங்கினள். இவ்விஷயத்தை வீமன் கேள்விப்பட்டு தன் பந்துக்களோடு அங்கு வந்தான்.

மண்க ளித்தது; மாதிரம் களித்தன; மலர்மேல்
பெண்க ளித்தனள்; பேரறம் களித்தன; கண்டோர்
கண்க ளித்தன; களித்தன கலைவலோர் நெஞ்சம்;
விண்க ளித்தன; களித்தது வீமன்மா நகரம். (197)

வாகுகன், நளனே என்றறிந்த இருதுபன்னன் தானறியாது செய்த பிழையனைத்தையும் மன்னிக்குமாறு கெஞ்சிக்கேட்டுக் கொள்ள, நளனும் அங்ஙனமே மன்னித்து அவனுக்கு அசுவஹிருதய வித்தையை அருளியும், இன்னுரை வழங்கியும் அவனை அயோத்திக்கு அனுப்பினன்.

---

## அரசாட்சிப் படலம்.

மழைமுக தக்களி யானையும் கலிவாம் பரியும்
செழும ணித்தடம் தேர்களும் மயாவரும் செறிய
எழுக டற்புவி மன்னரும் இறைஞ்சினர் செல்ல
அழலுயிர்க்கும்வேல் அரசனும் நிடதநா டடைந்தான். (198)

மூழ்கி பிற்புறத் திருந்தபின் 'மொய்யமர் தொடங்கப்
போதல் செய்கவெம் போர்த்தொழிற் கஞ்சினை யாகில்,
காத லிற்கவ ருடுவான் வருகெனக் கழறித்
தூது போக்கினன் புட்கரன் றனக்குவேற் றோன்றல். (199)

நளனொடுபோர் செய்தல் அரிதென்று புஷ்கரன் உணர்ந்து சூதாட ஒப்புக்கொண்டான். நளனும் தன்னகரத்துட் சென்று 'புஷ்கர! சூதாடுதற்கு ஒட்டம்யாது?' என்று கேட்டான். அதற்குப் புஷ்கரன், 'மன்னர் மன்ன! நீ தோற்பின் முன் சூதாடுகையில் கடைசியில் குறித்ததையே கொடுப்பாய். நான்தோற்றால் என்னுயிரோடு உன்நாட்டையும் தருவேன்' என்றான்.

அன்ன வாறியைந் தாடலும் புட்கரன் தோற்ப
'மன்ன முன்னநீ வென்றதுங் கொடுங்கலி வயத்தால்
நின்ன தாருயிர் சேர்ந்தனன் எம்பியா தலினால்
தொன்ன கர்க்கினி தே'கெனப் பணித்தனன் றோன்றல். (200)

தமயந்தி நிடத நாடடைந்து நளன்பாற் சேர்ந்து அவனைத் தொழுது நின்றாள்.

ஆழி சூழ்புவி முழுவதும் ஆழியோன் றருட்டி
வாழி நல்லறம் புரிந்தரு மகம்பல ஆற்றிச்
சூழி மால்வரைப் பிடருறு சுமையொழித் தாறப்
பாழி யம்புயத் தலகெலாம் புரத்தினி திருந்தான். (201)

நைடதச் சருக்கம் முற்றிற்று.

# நைடதச் சுருக்கம்.

## செய்யுட் குறிப்புகள்.

### நாட்டுப் படலம்.

நைடதம்-நிடத நாட்டு அரசனைப் பற்றிக் கூறும் நூல். வட
மொழி தந்திநாந்த நாமம்; வடமொழியில் ஹர்ஷகவி எழுதிய
நைஷதம் இதற்கு முதனூல். தமிழில் நைடதம் எழுதிய அதிவீர
ராம பாண்டியர், வழுதி மன்னனாகிய வரதுங்க பாண்டியருக்குத்
தம்பி. இவர்க்குப் 'பிள்ளைப் பாண்டியன்' என்றும் பெயர். இவர்
இந்நூல் தவிர வேறு பல நூல்கள் இயற்றியுள்ளார். அவை, நறுந்
தொகை, திருக்கருவை அந்தாதிகள், காசி காண்டம், கூர்ம புரா
ணம் முதலியன ஆம். இவர் இற்றைக்கு 600 வருடங்களுக்கு முன்
னிருந்தவர் என்ப. தமிழிடத்துப் பேரபிமான முடைய இவர் தம்
குல அபிமானம் பெரிதும் உடையவர். இதை இந்நூலில் 70, 71-
வது பாடல்களால் வெளியாகும். இந்நூற் சிறப்புக்கு, 'நைடதம்
புலவர்க்கு ஔடதம்' என்ற பழமொழி ஏற்ற சான்றாகும்.

(1) ஒழுகு தீம்புனல்-அதிகரித்து ஓடுகின்ற இனிய (மழை)
நீர்; சிறைசெயும்-கரை போட்டுத் தடுக்கும் போதுண்டாகின்ற;
ஓதை-ஓசை. குழு-கூட்டம்; சும்மை-ஓசை; உழத்தியர் குரவையின்
ஆர்ப்பும்-கடைசியரது குரவைக் கூத்தின் ஆரவாரிப்பும்; மழை-
மேகம்; மாறு கொண்டு-பகைமை கொண்டு; ஓதையும், சும்மையும்,
ஆர்ப்பும் மேக ஒலிபோல் இருந்தன என்பது கருத்து. மாது,ஓ
அசைகள். வாழ்கென-அ தொகுத்தல் விகாரம்.

(2) பண்ணைவாய்-வயல்களில்; வாய் ஏழனுருபு. பணிலங்
கள் உயிர்த்த-முத்துக்களால் தரப்பட்ட; கண் உடை-கணுக்களையு
டைய; கமழும்-வாசனை வீசுகின்ற; தண் அம்தாமரை-குளிர்ச்சி
பொருந்திய அழகிய தாமரைப் புஷ்பங்களால்; தயங்கி-விளங்கி;
குமுதம்-அல்லிப் புஷ்பங்கள்; வாய்விள்ளும்-மலரும்; சங்கு, கரும்பு

தாமரை முதலியவற்றில் முத்துண்டாகும். குமுதம் சந்திரனைக் கண்டபோது புஷ்பிக்கும் இயற்கையுடையது. முற்கூறிய முத்துக்கள் சந்திரஒளியைத் தந்ததால், அம்மலர் எப்போதும் நிடத நாட்டில் புஷ்பிக்கும்—கருத்து.

(3) குழையும்-வாடுகின்ற; மருங்கு-இடை; கொடியன-கொடுமை உள்ளன; மாதர்-அழகிய; படை-வாள்; வாளா-வீணாக; படுகொலை-இறந்துபடும் கொலைத் தொழிலை; சிலம்பு-பெண்கள் அணியும் ஒரு ஆபரணம்; அரற்றுவ-புலம்புவ. கடிமது-வேதத்தில் விலக்கப்பட்ட கள்ளை; நுகர்வ-குடிப்பன. நிடத நாட்டில், கொடியோரும், கொலைத் தொழில் செய்பவரும்; தமது குறைகளை முறையிடுபவரும் இல்லை என்பது கருத்து. இச் செய்யுட்கு வேறு பொருளும் பொருந்தும்.

(4) கடல்படு பொருள்-கடலில் உண்டாகிற அமிர்தம், (உப்பு முதலியன,) மல்லல்-வளப்பமுள்ள; கான்படும் அமுதம்-காட்டிலுண்டாகிற (பால் முதலிய) அமிர்தமும்; தடம் வரை அமுதம்-விலாசமான மலைகளில் உண்டாகிற [தேன் முதலிய] அமிர்தமும். தலைமயக்குற்ற ஆற்றால்-கலந்து கிடந்த தன்மையால்; உடைதிரை-கரையை உடைக்கிற அலைகளையுடைய; ஒன்று அமுதமே-ஒரே தேவாமிர்தத்தை; நிகழ்த்தலாம்-சொல்லத்தக்க; தகைமைத்து-குணத்தைக் கொண்டது. கொல் ஐயப் பொருள்தரும் இடைச்சொல். இச்செய்யுளில், அமுதம் என்றதைத் தேவாமிருதத்துக்கும், அத்தனை உணவுப் பொருள்களுக்கும் கொள்க; பல அமுதங்களை உடைய நிடதநாட்டுக்கு ஓரமிர்தம் மட்டுமுடைய தேவலோகம் சமானமாகாது என்பதாம்.

## நகரப் படலம்.

(5) ஒற்றை ஆழி அம் தேரவன்-ஒரு சக்கரத்தையுடைய அழகிய தேரை உடையவன்: சூரியன். பிறங்கு-விளங்குகின்ற; கதவங்கள்-கதவுகள்; அற்றம்-சமயம்; அங்கனார்-ஸ்திரீகள்; கற்றை-

தொகுதியாகிய; சாளரத்து ஆடியிற் காட்டும்-ஜன்னலுக்கு வெளியிலிருந்து நிலைக் கண்ணாடிபோற் காட்டுவான் (சந்திரன்.) அந்நகரின் மதில்கள் மிகவுயர்ந் திருந்ததால், சூரியன் அவற்றைத் தாண்டிச் செல்ல முடியாமல், அவற்றின் கதவுகள் திறக்கப்படும் சமயம் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்; சந்திரன் சாளரத்தில் நுழையாமல் வெளியே நின்றான் என்பதாம்.

(6) மறு இகந்த வெண்மதி-களங்கம் நீங்கிய வெண்மையான சந்திரன்; வயங்கிய-விளங்கிய; பித்தி-சுவர்கள்; செவ்வி-அழகு; நறவு உயிர்த்த-தேனைத் தருகின்ற; பைந்துணர்-பசுமையாகிய பூங்கொத்துகளால்; மலி-நிறைந்த; வெளிறிது- வறுமையை உடையது; வெண்நகை-வெள்ளிய சிரிப்பு.பளிங்கு மாடங்களின் வெள்ளொளி; கற்பக நாட்டைப் பார்த்து அந்த நகரம் சிரித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

(7) வடிகொள்-வடித்துக் கொள்ளப்பட்ட; சுதை-சுண்ணம்பு; தீற்றிய-பூசிய; மைமுகில்-கரிய மேகம்; பால் நிலா குழவி-வெண் பிறை; வெள்ளைப் பொடி-விபூதி; கறை-(ஆலகால விஷம் தங்குதலாலாகிய) அடையாளம்; மிடறு-கண்டத்தையுடைய; அண்ணலைப் பொருவும்-பரமசிவனை ஒத்திருந்தன.

(8) உருவுஇல்-அழகில்லாத. மைந்தரில்-ஆடவர்களில். வேனில் வேட்கு-வசந்த காலத்துக்குரிய மன்மதனுக்கு. உடைந்துனர்-தோற்றவர். பொருள் இலார்களில்-செல்வமில்லாதவர்களில். தனதனை-குபேரனை. பொருவு இலார்-ஒவ்வாதவர்கள். தெருள் இல்-கல்வி அறிவில்லாத. சேடனில்-ஆதிசேடனைப் பார்க்கிலும். தாழ்ந்னர்-தாழ்ந்தவர்கள். அருள் இலார்களில்-ஈகை இல்லாதவர்களில். ஐந்தரு-ஐந்து கற்பக விருக்ஷங்களுக்கு. நிகர்க்கலார்-ஒவ்வாதவர்கள். அழகிலும், செல்வத்திலும், அறிவிலும், ஈகையிலும் அந்நகரத்தார் மிகவும் மேம்பட்டிருந்தார்கள் என்பது கருத்து.

(9) களைகணாய்-ஆதாரமாக. தளை அவிழ்-கட்டு அவிழ்த்த. நறு-வாசனை பொருந்திய. தாரினான்-மாலையை உடையநளன். நாமம்-பயத்தைத்தரும். உலகுஒரு மூன்றும்பெயரியமன்னவன்;-இந் நகர் மன்னவன், மன்னர் மன்னவன், நாமவேலினான் என முடிக்க.

(10) ஒன்னலர்-விரோதிகளுடைய. உரிஞ்சு-தேய்தற்குக்காரணமாகிய. தாளினான்-அடிகளை உடையவன். மன்னுயிர் அனைத்தையும்- நிலைத்திருக்கும் எல்லா உயிர்களையும். புரக்கும் காப்பாற்றும். மாட்சியான்-பெருமையை உடையவன்.

(11) வெம்கலி-கொடிய தரித்திரமாகிய. திங்கள்-சந்திரனைப்போல. வெண்நிலா உமிழ் அம்கவிகையான்-வெண்மையாகிய நிலாவை வீசுகின்ற அழகிய குடையுடையவன். திகிரி ஒன்றினால்-ஏகசக்கரத்தினால். அளிக்கும் ஆற்றலான்-காப்பாற்றும் வலியை உடையவன். மங்குலின்—மேகத்திலும். வண்கையான்—வளம் பொருந்திய கையை உடையவன். குடையின் சிறப்பைக் கூறுமாற்றால் அவனர ஆட்சியை விளக்கினார் என்க. நளன் சக்கரவர்த்தி ஆதலால், திகிரி ஒன்றினால் காப்பாற்றுகிறவன் என்னப்பட்டது.

## அன்னத்தைக் கண்ணுற்ற படலம்.

(12) வையம்-பூமிக்கு. பூணான்-ஆபரணங்களையுடைய நளன். தளர்வொடு மெலிந்தும்—மனத் தளர்ச்சியொடு வாடியும். வீமன் பாவை—வீமராஜனுடைய மகளாகிய பாவைபோன்ற தமயந்தியை. பாவை-உவமையாகு பெயர். அலி-கொடு என். இனி கின-எற்ப திகழ்ச்சி என்று. இழி, எதுகை நோக்கி இனி என்றாயிற்று. மானம் பூண்டவர்-மானத்தை ஆபரணமாக உடையவர்கள். அறவிட்டா

லும்-முற்றும் கைவிட்டாலும். இரப்பர் கொல்-யாசிப்பார்களோ? யாசியார். உயிர்போனாலும் மானமுடையவர்கள் இரக்க மாட்டார்கள், ஆதலால் நளன், தமயந்தியைத் தனக் கீயுமாறு யாசித்திலன் என்க.

13. மேவிய—விரும்பப்பட்ட; தண்கனி—குளிர்ச்சியான பழங்களையுடைய; பொறையினால்—பாரத்தால்; வியன்சினை-பெரிய கிளைகளையுடைய; தருக்கள்-மரங்கள்; நிலப்பெண் கொடி-பூமிதேவியினுடைய; தாள் தொழும்-அடியை வணங்கும்; பெற்றி-தன்மை. மரங்கள் தலைகள் தாழ்ந்து நின்றமை, தம்மைப் பெற்ற பூதேவியாகிய தரையை வணங்குவது போன்று காணப்பட்டது.

14. மிடைந்த-நெருங்கி; விசும்புறை-விண்ணுலகில் வசிக்கும்; வெற்பினால்—மந்திரமலையால்; வளன் எலாம்-செல்வம் எல்லாம்; குடைந்து-கிண்டி; இமிர்-சப்திக்கப் பெற்ற; கொள் - (அவ்வளங்களைக்) கொண்ட. வாவியை—தடாகத்தை. அன்னால்-நளமகாராஜன். முன்காலத்தில் தேவர்கள் (பாற்கடல்) கடைந்து தன்னிடத்திலுள்ள செல்வத்தைக் கொண்டனர் ஆதலால், திரும்பவும் அவர்கள் வந்து மீதியுள்ளவற்றையும் கொள்வர் எனப்பயந்து அவ்வனத்துள் ஒளிந்தது போல் அத் தடாகம் காணப்பட்டது. அரசன் கண்ட அப்பொய்கை மிகவும் விசாலமானது என்பது கருத்து.

15. தும்பிகள்-வண்டுகளால். உழு-கிண்டப்படும். வள்ளம் வாய்-கிண்ணம் போலும்வாய். விரிந்த-விரித்திருக்கிற. தரித்திடு-தாங்கப்பட்ட, (இடு-துணைவினை) திரு கிளர்-அழகால் விளங்குகிற. நிலவு உமிழ்-நிலாவைக் கக்குகிற. வெண்டாமரை மலர்கள் களங்கமுள்ள சந்திரனைப் போல், நிலாவை உமிழ்ந்தன. வண்டு, களங்கத்துக்கும், தாமரை, சந்திரனுக்கும் உவமை.

16. சூழ்வளியுடன்-அலைக்காற்றோடு. வாழ்வழி-விதிவசமே. தாழ்புலன்வழி-அற்ப இடமான அவ்வனத்திடம். ஒதிமம்-அன்னத்தை. பாழி அம் தோளினன்-வலிமையாகிய அழகிய தோள்களையுடைய நளன்.

17. புள்குலம்-பக்ஷிகளின் கூட்டம். திருதரு-அழகுள்ள. இரைத்து அயர்-சப்தித்து வருந்துகிற. வருத்தலை-வருத்தப் படுத்தாதே. மறித்தல் போன்றது-தடுத்தது போன்றது, பறவைக் கூட்டம் சிறகைப் பரப்பி எழும்புகையில் காற்றைவீச, தாமரைமலர்கள் அதனால் அசைந்தன. அப்படி அசைதல் எப்படியிருந்ததென்றால் அத்தடாகமானது அவ்வன்னத்தை வருத்தாதே என்று நளனைத் தடுத்தல் போன்றது என்பதாம்.

18. மதிவதனம்-சந்திரனைப் போன்ற அழகிய முகம். நவிறல்-சொல்லல்.

19. கறை கெழு-விரோதிகளின் இரத்தக்கறைபடிந்துள்ள. சிறை ஒளிர்-என் சிறகுகளிலே விளங்குகிற. நல்குமோ-கொடுக்குமோ. நல்கு-பகுதி. அலைறகடல்-சப்திக்கிற சமுத்திரம். பனியின் நிறைவதாம் கொலோ-பனியால் நிறையுமோ? நிறைதரு-நிறைந்த. தரு-துணைவினை. ஆல், ஈற்றசை.

20. தாறு பாய்கவுள் மதம் தறுகண் யானையாய்-முட்கோல்கள் பாய்ந்த கதுப்பையும், மதஜலத்தையும், கோபக்கண்களையும் கொண்ட யானையை ஒத்த நளனே!; கேடு நலி செய்தால்-கொன்றால். தேறினோர்-நம்பினவர்க்கு. பிழைத்த-தீங்குசெய்த. வன்பழி சேரும்-கொடிய பாவமானது உன்னை அடையும். ஆல், அசை. மாறு கொள்-விரோதத்தைக் கொண்ட. மனம்கொள்ளார்-நினையார்.

21. மூப்பு-கிழப்பருவத்தால். அதிராவு-வருந்துதலை. என் படுத்தலும்-என்னைப் பிடித்த அளவில். வெருவி-பயந்து, ஆங்கு-தெய்வ லோகத்தடாகம். துன்னி-நெருங்கி. புள்-பிறபறவைகள். இன்னல் கடலுள்-துன்பக் கடலில். அம், கொல், ஆம்-அசைகள்.

22. பிரிவு எனும் அழல்-பிரிந்திருத்தல் என்னும் அக்கினி; பார்ப்பு ஏலாம்-குஞ்சுகள் எல்லாம். இரை பெறுகுடம்பை உள் -இரையைப் பெறாமல் கூண்டுக்குள்ளாக. பரிவினில்-துன்பத்தால்.

23. ஆகுலத்துடன்-துன்பத் தொடு, சேகுறு-மாற்று உயர்ந்த. சிறகர்-சிறகுகளை. மோகமே-ஆசையாலே. எகு உழி எகு என-போகவேண்டிய இடத்துக்குப் போவென்று. இறை-நளன்.

## அன்னத்தைத் தூதுவிட்ட படலம்.

24. மணிவண்ணன் உந்தி அம்தாமரை உறைவோன்-நீல மணிபோலும் நிறத்தையுடைய திருமாலது தொப்புளில் உண்டான அழகியதாமரையில் வசிக்கும் பிரமன். அரிபரந்து-இரேகைகள்படர்ந்து. மழைமதர் நெடுங்கண்-குளிர்ந்த களித்திருக்கும் விசாலமாகிய கண்களையுடைய. புழைவழி-துவாரத்தின் வழி. விசும்பிணை-ஆகாயத்தை. இன் சாரியை. பிரமன் சந்திரனுடைய சிறந்த அழகை எடுத்து தமயந்தியின் முகத்தைப் படைத்தான். அவ்வழகை எடுத்த இடத்தில் காணப்படும் துவாரத்தைச் சந்திரனுடைய களங்கம் என்று சொல்வர்.

25. மடவரல்-மங்கை. வீத்ததார்-கோக்கப்பட்ட பூமாலை. தலம் துறந்து-இடத்தைவிட்டு. இம்பரில்-இவ்வுலகில். காணிய-காணும் படியாக.

26. தெளிகுநர்-அறிஞர். தைவந்து-தடவி. காதல்கூர்-அன்பு மிகுந்த.

27. மீது உலாய தாரகைகாப்பணில்-ஆகாயத்தின் மீது திரியும் நக்ஷத்திரங்களின் நடுவில். சீதம் வெண்கதிர் திங்கள்-குளிர்ச்சி பொருந்திய வெள்ளிய கதிர்களையுடைய சந்திரன். மாதர்-அழகு.

28. அவிர்-விளங்கும். பூண் ஒலியாமல்-ஆபரணங்கள் சப்தியாமல். கவர்வான்-தன்னைப் பிடிக்கும்படி. துவர் வாய்மயில்-பவளம் போலும் சிவந்தவாயை யுடைய மயில்போலும் அழகுடைய தமயந்தியாலே. துவர் வாய்மயில் அன்மொழி. நவை-இகழ்ச்சி. நீர்-நீர. அவ்வன்னம் தமயந்தியின் கையில் அகப்படுவது போல் மெல்ல நடந்து, அவள் கையிற் பிடிக்க எண்ணுகையில் குதித் தோடிப்போம்.

29. முருகு உண்டு - தேனை உண்டு. நவனது முகத்துக்குச் சந்திரன் ஒப்பாகாததால் அன்றோ, அதனை மாதம் தோறும் புதிதாக உண்டாக்குகிறான். நளனுடைய முகம் சந்திரனிலும் அதிக அழகுடையது என்பது கருத்து.

30. கங்குல்-இரவில். பைங்கள்-பசுமையாகிய தேன். தொங்கல்-பூமாலை. 'சந்திரனைக் கண்டவுடன் தமரை மலர்குவியும். அதனிலும் தாழ்ந்த அல்லிமலர் சந்திரனை அனுபவிக்கும். அழகிற் சிறந்த நீ, நளனை அடையாது உன்னிலும் தாழ்ந்த பிறமாது அடைதல் அத்தன்மையதேபோலும்' என்று கூறியது அன்னம்.

31. பொலன் சிறைய பொன்மயமான சிறகுகளையுடைய. விரை உயிர்க்கும்-வாசனை வீசுகின்ற; ஆல் அசை. தாமரைக்குச் சூரியனும், அல்லிமலர்க்குச் சந்திரனுமல்லால் வேறுதலைவர் இல்லை, அது போல் நளனன்றி எனக்கு வேறுதலைவன் இல்லை என்று தமயந்தி கூறினள் என்பதாம்.

32. ஐயமுறேல்-சந்தேகப்படாதே. அணியல்-மாலையை. மையல் புரிவேள் - மயக்கஞ் செய்கிற மன்மதன். மன்றல்-வாசனை. தாதை—தகப்பன்.

33. திருந்தார்-விரோதிகளுடைய. உளகொல்-உண்டோ? முருக்கு அவர் முறுவல் முகம்-மயிலினங்கின் குருத்துப்போலும் பற்களையுடைய முகத்தை. மகிழும், செய்யும் என்னும் வாய்பாட்டு முற்று.

## இந்திரப் படலம்.

34. ஆண்தகை-ஆண்களிற் சிறந்தவன். முத்தம்-முத்தாற் செய்யப் பட்ட. யாழ்வல்லோன்-நாரத முனிவன்.

35. விழுப்பொருள்-மேலான பொருள். மகபதி-இந்திரனுடைய. பண் அமைந்த-இராகம் அமைந்த. நண்ணி-அடைந்து. ஆசி-ஆசீர்வாதம். அன்று, ஏ-அசைகள்.

## நளன் தூதுப் படலம்.

36. பூகம் மடல் கிழி-கமுகம் பாளையைக் கிழித்து. வாளை-வாளை மீன்கள். உயிர் ஓவியம்-உயிரை உடைய சித்திரத்தை. தோகை-மயில்போலும் சாயலையுடைய தமயந்தியை: உவமையாகு பெயர்.

37. முடங்கலில் -- ஓலையில். குடங்கையின் -- உள்ளங்கை போல. கோநகரி-குண்டின புரத்துக்கு. முடங்கல்-ஆண் சிங்கம்.

38. பொலிந்து - விளங்கி. மல்-மற்போர். விண்ணுளோர்-இந்திரன் முதலிய தேவர்கள்.

39. முதல் நான்கு பாடல்கள் நளன் கருத்தைத் தெரிவிப்பன.

40. நாணம் மீ கிளர்ந்த-வெட்கம் அதிகரிக்க. கிளக்கும்-சொல்லும். மூர்ச்சனை-மூர்ச்சையானது. நளி புனல்-குளிர்ந்த

41. உரவு-சப்திக்கின்ற. அளித்தவான் பொருள்-கொடுத்த சிறந்த பொருளை. இரவலர்-யாசகர். தமரினும்-பந்துக்களைக் காட்டிலும்.

42. ஊதியம்-இலாபம். சினர் கிரப்பினல்-மிகுந்த தரித்திரத்தால். ஏற்குநர்க்கு-யாசிப்பவர்க்கு. ஆர்வம் மீதூர-ஆசை அதிகமாக. ஆல், அசை.

43. பணைத்து-பருத்து. குவவுத் தோளினன்-திரட்சி பொருந்திய தோள்களை உடையவன். வாசவன் – அஷ்டவசுக்களுக்கும் தலைவன்: இந்திரன்.

44. பொன்நகர் - இந்திரலோகம். சொன்னவை-வினையாலணையும் பெயர்.

45. மதர்விழி-களிப்பு மிகுந்த கண்கள். செயிர் அற-குற்றம் நீங்கிய. உளைய- வருந்தும் படியாக.

46. சிவையின் ஊடு - உலை மூக்கில். மருத்துவன் - இந்திரன்.

47. துப்பிதழ் மடந்தைபால் - பவளம் போல் சிவந்த அதரத்தையுடைய தமயந்தியிடம். ஓர்ந்தும்-தெரிந்தும்.

48. விழைந்த-விரும்பிய. தளிர் இயல்-தளிர்போலும் இயல்பையுடைய. வெள்குறாது-வெட்கப் படாமல். உள்ளம் குழைந்து-மனம் கரைந்து.

'பின்பு இந்திரன் நளனைப் பலவாறு புகழ்ந்துரைத்தான்' என்பதை 48-வது செய்யுளின் கீழ் அமைத்துப் படிக்க.

49. வளைஇ-சுழ்ந்த. இழுக்கு உறு-கெடுதல் அடையாத. அலங்கல்-மாலையை உடைய.

50. மின் இடை-மின்னல் போலும் இடையை உடைய. அயிராணி-இந்திரனது மனைவி.

51. பாய் ஒளி பரிதி - பரந்த ஒளியை உடைய சூரியன் ஆல், அசை.

52. ஐந்தரு நீழல் வேந்தன் - பஞ்ச தருக்களின் நிழலிலிருக்கும் தலைவன், இந்திரன். ஆர்கலிக்கு இறைவன்-சமுத்திரத்துக்குத் தலைவன், வருணன். தெருமரல்-சுழற்சி, மயக்கம்.

53. ஆசைக்கு - திக்குகளுக்கு. மாற்றம் - சொல். கொங்கு அவிழ் குழையில்-வாசனை பொருந்திய காதணியில். குமிழ் மிசை மறியும்-குமிழம் பூவின் மேற்பக்கத்தில் மீளுகின்ற. கலுழ்-ஒழுகும். ஆசையால்-பிரியத்தால்.

54. காரிகை-தமயந்தியினுடைய. மூரி - வலிமை பெற்ற. தோன்றல் பால்-நளனிடம்.

55. வெள்ளியம் கிரி-கைலாசமலை. மேய-பொருந்திய. சீக்கும்-போக்கும். செய்ய-சிவந்த. கொடிஞ்சித் தேர்-மேல் மொட்டையுடைய தேர்.

56. தெரியல்-மாலை. செவ்வி-அழகிய. குரை-சப்திக்கும்.

57. இழை-ஆபரணங்கள். மிடைதல்-நெருங்குதல். இமிர்தல்-மொய்த்தல். உழைபொரு - மானை ஒத்த. மாதோ-மா, து, ஓ, அசைகள்.

58. பிள்ளைமான்—இளமான். பிறங்கல்-மலைபோன்ற. அள் இலை-நெருங்கிய இலை. உள் உறை பிலிற்றும் - வளமையாகிய துளியைத் துளிக்கின்ற. கிள்ளை-கிளி.

59. இழை நேர்ந்த நங்காய்-ஆபரணங்களை அணிந்த பெண்ணே! நங்கை-பெண்களிற் சிறந்தவள். ஆங்கு பால் நம்பி தேர்துணர் வீழ்ந்தபோதும்-வாசனையுள்ள மகரந்தப் பொடியை உதிர்க்கும் புஷ்பத்தையும். அகில் துணி-அகில் துண்டுகள். பொன்னி-காவிரிநதி. பொன்னைக் கொழித்து ஓடுவது.

60. தவிசு-ஆசனம். சேடு இளம் பரிதி-மிகுந்த இளமையான சூரியன்போல்; பாட்டு அளி-பாட்டையுடைய ஆண் வண்டுகள்; முகை-மொட்டு; தேறல்-தேன்; கொற்கை அம்பதிக்கு வேந்தன்-பாண்டியன்.

61. இச் செய்யுள்இந்திரனுக்கும்நளனுக்கும்சிலேடை. இந்திரன்: (1) வலன் உடை வயிரத் தோளான்-வலனைக் கொன்ற வச்சிராயுதம் உடையவன், (2) கற்பகம் மலிந்த தோளான்-கற்பக மலர் மாலை அணிந்த புஜங்களுடையவன்; (3)பலபகை வரை முன் செற்ற-பலவான பகை கொண்ட மலைகளைமுன் சிறகறுத்து ஜயித்த. நளன் (1) கூர்மையாகியவாளையுடையவன். (2) மலையைப் பிளக்கும் படியானவலிய தோள்களையுடையவன். (3) பல சத்துருக்களை முன் செயித்த அழகிய மார்பை உடையவன்.

## அக்கினிக்கும், நளனுக்கும் சிலேடை.

62. அக்கினி: (1) வெகுளி உள்ளத்து ஒருவிஞன் - கோபமுள்ள மனங் கொண்ட ஆட்டுக் கடாவை வாகனமாகவுடையவன்; (2) பொங்கி ஆர்த்தபகை இருள் பிழம்பு சீக்கும்—விளங்கி ஒலித்தபகையாகிய இருள்பிழம்பை ஓட்டுகின்ற; பலசுடருமிழும்—பல ஒளியைக் கொடுக்கிற; வாளான்—வாட்படையுடையவன்; (3) புலவர் ஏத்தும்—தேவரால்துதிக்கப் பெற்ற; தாலம் ஏழுடையகோ-ஏழுநாவை உடைய தீக்கடவுள். நளன்: (1) புகலுதற்கரிய கோபத்தை நீக்கினவன். (2) மிகுந்து சப்திக்கும் இருளை ஒத்த பகைவருடைய கூட்டத்தைக் கெடுக்கிற பலசுட்ருமிழும் வாளான; (3)பெருமை வாய்ந்த வித்துவான்களால் துதிக்கப்பட்ட சப்ததீவுக்கும் அரசன்.

63. அஞ்சனம்-மை; ஆற்றுது-பொறுக்காமல்; நையும்-வருந்தும்; செஞ்ச-செவ்வையாக. இச்செய்யுள் யமனுக்கும் நளனுக்கும் சிலேடை, யமன். எஞ்சல் இல் தருமன்-குறைவில்லாத தரு

மன் என்னும். பெயருடையவன்: நளன் குறையாத தருமத்தை உடையவன்; செங்கோலையுடைய அரசன்.

64. பால்திரை-பால் அலைகளையுடைய கடல்: பாற் கடல் வைகிய-தங்கிய. இதுவருணனுக்கும் நளனுக்கும் சிலேடை; வருணனைக் குறிக்கையில் புவனம், சேமிஎன்ற பதங்கட்கு, நீர், பூமி என்றும், நளனைக்குறிக்கையில் பூமி,சக்கரம்என்றும்பொருள் கொள்க.

65. போது அரி—செவ்வரிபரந்த; வேனிலான்- மன்மதன்;

66. கொல்நுனை— கொல்லுகிற நுனியை யுடைய; பூங்கழல்-அழகிய வீரக்கழல்களை அணிந்த பாதம்.

67. சிற்றம்துப்பில்—மிகுந்த கோபம்; மேவலர்- பொருநர் தாதவர்கள்; விரோதிகள்; முழவு—மத்தளத்தை ஒத்த; மாவலிர் மாவடுவின் பிளப்பை ஒத்த; மாலையே—புஷ்பமாலையே: மாலை ஆக-மாலைப்பொழுதாக; நெடுங்கண் பண்புத்தொகை அன்மொழி.

## போர் புரி படலம்.

68. மடர் ஒளிமிகுந்த பிரகாசம்; வெய்யோன்-சூரியன்; திங்கள் மரபினன்-நளன்.

69. ஒண்டொடி-ஒண்மை, தொடி-பிரகாசமாகியவளையலை யணிந்தவள் (பண்புத்தொகை அன்மொழி); திண்திறல்- மிகுந்த வலிமையைக் கொண்ட; செருவினில்—சண்டையில்; இரியல போக-ஓடிப்போக; மண்டு அமர் கடந்து—நெருங்கிய யுத்தத்தில் ஜயித்த.

70. சக்கு-சிரித்து; வழுதி-பாண்டியன்; குன்ற எறி வயிர ஒள்வாள் குரிசில்- மலைகளின் சிறகறுத்த ஒளியையுடைய வச்சிராயுதத்தை ஏந்திய இந்திரன்.

71. வெகுளலை-கோபியாதே; மௌலி-கிரீடம்; இச்செய்யுளில் கடைசி இரண்டு அடிகளிற் குறித்தகதையைத் திருவிளையாடற் புராணம் வசனத்தில் வாசித்தறிக.

72. ஓரி-நரி; கவந்தம்-தலையில்லாத முண்டம். ஒள் அழல் தறுகண் கூற்றம்—ஒளியுடைய நெருப்புப்பொறி பறக்கும் அஞ்சாமையுடைய யமன்.

73. கூன்பிறை—வளைந்த பிறைச் சந்திரனை யொத்த: கோட்டு வல்வில்-கொம்பினாலான வலியவில். வான் படுபிணம் குன்று-ஆகாயத்தை அளாவிய பிணக் குன்றுகள்; வயின் வயின்-எல்லா இடங்களிலும்.

## மணம் புரி படலம்.

74. விளங்கு இழை-விளங்கும் ஆபரணங்களையணிந்த தமயந்தி; வினைத்தொகை அன்மொழி.

75. வேரி அம் தொடை-தேன் ஒழுகும் அழகிய மலர் மாலை யணிந்த; நான்மறைச் செல்வர்—பிராமணர்; ஓரை-முகூர்த்த காலம்; உழை-அருகிருந்து; ஆரம்மார்பற்கு-மாலையணிந்த மார்புடைய நளனுக்கு.

77. கள் அரு மலர் நாற்றி- தேன் நிறைந்த பெருத்த மலர் மாலை தூக்கி; பிள்ளைமான் நிகர்நோக்கி-இளமான்பார்வையுடைய தமயந்தியை; மணத் தவிசு-மணவறை.

78. உதகம்-தாரை வார்க்கும் நீர். கணிதர்-சோதிடர்கள்; பதலை-வாத்தியங்கள்.

79. செம்தாரதன்-செம்மையாகிய கீர்த்தியின் புஷ்பம், அலர்ந்தது எனவுஞ் சிரித்தது என்னும்படி; தோல்வளை-தமயந்தி: இமையமாதும் இறைவனும்-பார்வதி தேவியும் பரமசிவனும்.

80. பங்கயப் பதம்-தாமரை மலர் போலும் பாதம்.

81. முருகு-தேன்; அளிமூசு-வண்டுகள் மொய்க்கப் பெற்ற. தேசிகர்-ஆசிரியர்.

83. அல்லி-அகவிதழுடைய; மல்லல் அம் தெரியல்-வளமையான அழகிய பூமாலையுடைய; மாழ்கி-வருந்தி.

84. உழந்த வாடும்-துன்பத்தில் அலைந்து வருந்தும்; பிணை அனார்-மானைப் போன்ற ஸ்திரீகள்; துளவினோன்-துளசி மாலை யணிந்ததிருமால். வரைமலர் கோதை-திருமகள். ஆற்றினன்-தேற்றினன்.

85. அம்மெல் ஓதி-அழகிய மெதுவாகிய கூந்தலையுடைய. மின் அன்னாட்கு-மின்னலையொத்த நமயந்திக்கு. புரிதி-செய்வாயாக.

## மீட்சிப் படலம்.

86. அண்ணல்-பெருமைதங்கிய. அம்-அழகிய. குருதி-இரத்தம். எண் இட-எள்ளை இடுதற்கு. நேமிசூழ்-சமுத்திரம் சூழ்ந்த. மண் அகம்-பூமியினுடைய; வரைப்பு எலாம் மலிந்த-எல்லை யெல்லாம் நிறைந்தன. தானை-சேனை.

87. நிலவு வெண் கவிகை-பிரகாசிக்கும் வெண்கொற்றக் குடையை; கிடுற்ற-பிடிக்க. கவரி கால் செய-சாமரைகள் காற்றை உண்டாக்க; சிலை உலாம்-மலைபோல் உலாவுகின்ற; தமனியம் தேர்-பொன்னால் செய்யப்பட்ட தேர்.

88. குழுமு-சுற்றிவர; பல்இயம்-பலவகை வாத்தியங்கள்; வடிவு கெழு-வடித்தல் பொருந்திய.

## கலி தோன்று படலம்.

89. அமரர் கோன்-இந்திரன்; முறுவல் எய்தி-புன்னகை செய்து; அம் மன்றலுக்கோ-அக்கலியாணத்துக்காகவோ.

90. கனல் அழல் சிதறு-கண்களில் நெருப்புப் பொறி பறக்க.

91. மல்லல்-வளமையுள்ள; அல்லல்-துன்பம்; துணைப்பதம்-இரண்டுபாதங்கள்.

92. நிழல் கனி களிநல் யானை-தன்னிழலைப் பார்த்து அது வேறுயானை என்று கோபிக்கிற நல்லயானையையுடைய; விழுநிதி-மிகுந்த செல்வம்.

93. கடிமனை-காவலையுடைய வீடுகள் எல்லாம்; கடவுளர் விழவு துன்றும்-தேவர்கள் திருவிழாக்கள் நெருங்கியிருக்கும்; நெடிபடு-வண்டுகள் உண்டாகிய; துறந்துளோர் நெருக்கம்-முனிவருடைய கூட்டங்கள் உள்ளன.

94. சென்னிவான் தடவு தெய்வச் செழுமலர்ச் சோலை-உச்சியானது ஆகாயத்தை அளாவுகிற தெய்விகமாகிய செழித்த புஷ்பத்தையுடைய சோலை; தன்னரும்-சேரப்படாத; சூழ்ச்சியோடு-ஆலோசனையோடு.

## போது கோய் படலம்.

95. செயலைகள்-அசோகமரங்கள்; அம் செம் சீறடி-அழகிய சிவந்த அப்பெண்கள் சிற்றடியில்; தோய்ந்த அரக்கு எறி-பூசிய செந்நிறத்தை வீசுகின்ற; பூஞ்சி உண்டு-செம்பஞ்சியைத் தம்மிடம் கொண்டு; கடுக்கும்-ஒக்கும்; இது பெண்கள் மிதிக்க மலர்ந்த அசோகத்தின் மாட்சியை உணர்த்துகிறது. பெண்கள் தமது மெதுவான பாதங்களால் அசோக விருக்ஷங்களை மிதிக்க, அவை அவர் தம் மடிகளின் செம்மையைக் கொண்டு பிரகாசிப்பதைப் போன்றன என்பது கருத்து.

குயில் திரளுக்கு மலராத கோங்கு
மாதர் குதலை கேட்டு மலர்ந்தமை.

96. கோங்கம்-கோங்கமரம்; தேம்கொள்-தேனைக்கொண்ட; சினை-கிளை; ஆர்ப்பது-கூவுவது.

97. கோதை மார்பன்-மாலையை அணிந்த மார்பையுடையவன். ஓர் கோல் வளை-ஒருபெண்ணுடைய. நீலம்-நீலோற்பல புஷ்பத்தை. புனைதலும்-சூட்டுதலும். மாற்றவள்-சக்களத்தி. கோதகும்பிடி-வருந்தும்படி; புனைகாலி நீர்ந்த-சூடியநீலோர்ப்பலத்தை ஒத்திருந்தனர்.

## புனல் விளையாட்டுப் படலம்.

98. செறிதலும்-சேர்த்தலும். மல்கு-நிறைந்த. பங்கயம்—தாமரையினுடைய. வாள்-பிரகாசம் பொருந்திய. உடைத்து-தோற்று. தேம் கமழும்-வாசனை கமழுகின்ற. பொங்கு தண் புனல் இடை-அதிகரித்த குளிர்ந்த நீரினிடத்தில். ஒளித்தல் போலும்-மறைந்து கொள்ளுதலை நிகர்க்கும்.

99. தூர்ந்த தாரைகள்-தூவிய நீர்த்தாரைகள். மன்னவன் நளமகாராஜனுடைய. பாய்தல்-வீழ்தலானது. வான் இடை மின் இனம்—ஆகாயத்தில்மின்னற் கூட்டம். கார்நடும் மிடைந்து-மேகத்துடனே நெருங்கி. மெல் புனல்—மென்மையாகிய ஜலத்தை. பொன்னெடுகுன்றின் மேல்-நெடியமகாமேரு மலை மீது.

100. சுண்ணம்-வாசனைப் பொடிகள். சாந்தமும்-சந்தனமும். உரவு-விரிந்த. அரசின்; சுண்ணமும், சாந்தும் எறிய, அவற்றைப் பொறுக்க முடியாததால், சமுத்திரத்தில் மூழ்குகிற மீன்னலைப் போல், புனலாடும் ஸ்திரீகள் என்பது திரண்டபொருள்.

## சூதாடு படலம்.

101. கால் கழுவாமல் செய் கடன் நளன் முடித்தான், தானிருந்த கலி நளனைப் பற்றினான். [illegible]கோ அடு-விரோதிமன்னர்களைக் கொல்லுகின்ற. சேவடி- செம்மையாகிய அடி. கருதுபுநினைத்து. வினையெச்சம். மேயினன்-சேர்ந்தான்.

102. விட்புலம் (விண்புலம்)-தெய்வலோகத்திலுள்ள. வட்கவெட்கமடைய. பெட்பும்-விருப்பும்.

103. வாள் திறல்-வீரப்போரில் வெற்றியை உடைய. நறுந் தாமம் நீண்முடி-வாசனை பொருந்திய மாலை அணிந்த நீண்டகிரீடத்தை. அரோ-அசை.

104. சூதினால் படுப்பல்-சூதினால் ஜயிப்பேன். கண் உறும்.-உன் கண்ணுக்குத் தோன்றுகிற.

105. களை கண் அது ஆகி-ஆதாரமுடையதாகி. எல் வையில்-சமயத்தில்.

106. கொல்சினம் வாகை வேல்குரிசில்-கோபத்தையுடைய வெற்றி பொருந்திய வேலாயுதத்தைக் கொண்ட நளமகாராசன், மல்லல் ஏறு-வளம் பொருந்திய இருஷபவாகனத்தில். எல் உமிழ் மணிக் கொடி-பிரகாசத்தைத் தருகின்ற அழகிய கொடியை. அடு சூதினில்-சொக்கட்டானால் செய்கிற சூதாட்டத்தில்.

107. தூமணி கல் என் பணைத்து உயர் கலவைத் தோளினன்-பரிசுத்தமாகிய இரத்தினங்களுடைய மலையைப் போல பருத்து உயர்ந்த சந்தனமணிந்த தோள்களை யுடைய நளமகாராசன். விடலை-புஷ்கரனே!.

108. நஞ்சினில்-விஷத்தைக் காட்டிலும். புணர்ப்பின்-சம்பந்தத்தால். செஞ்சரண்-சிவந்தபாதங்களை. செப்பல் மேயினர்-சொல்லத் தொடங்கினார்கள்.

109. கேழகம் சேர்தல்-சூதாடு மிடத்தை அடைதலும். மால் உற-மயக்கமுடைய. நயந்தல்-விரும்புதலும். ஒன்னலர்க்கு-விரோதிகளுக்கு. ஒன் அரு-இகழ்ச்சி இல்லாத. ஞாட்பினுள்-யுத்தகளத்தில் இரியல் செய்திட்டல்-பின்னிட்டு ஓடுதல். வள்ளியோய்—வரம்பில்லாது கொடுக்கும் நளமகாராசனே! அறம் நெறி வழக்கும் என்பரோ தருமமார்க்கம் மாறுபடு மென்று சொல்லுவார்கள்.

110. எய்து நல்குரவினுக்கு இயந்தது-இனிவரக் கூடிய தரித்திரத்துக்கு நல்ல தாகும். மேலையோர்-பெரியோர்கள்.

111. சூதினையென்னுக-சூதாட்டத்தை இகழ்வாயாக; இகலி வென்றதும்-பலக்கத்து ஜயித்ததும்; கள்ளம் மேற் கொடு-கபடத்தைக்கொண்டு; வலைகரந்து-வலையைமறைத்து; வேட்டுவர் உள் உற அமைத்திடும்-வேடுவர்கள் உள்ளேவைத்திருக்கிற; உணவை ஓர்கிலா-உணவை அறியாத;புள் இனம் அருந்தின போலும் என்பவே-பறவைக் கூட்டங்கள் உண்டவை நிகர்க்கும் என்று பெரியோர் கூறுவர்.

112. கலைக்கடல் கடந்துளோர்-அறுபத்து நான்குகலைகளாகிய சமுத்திரங்களின் கரைகண்ட மந்திரிகள்; கழறும் கட்டுரை-சொல்லுகிற சொல்லை; சிலைத்தழும்பு இருந்த தோள் செம்மல்-வில்தழும்புள்ள தோள்களையுடைய நளமஹாராஜன்; உயிர் உலப்பினும்-செத்தாலும்; உரைத்தவாய்மை மறுக்கிலன்-நான் சொன்ன வார்த்தையைத் தடுக்கமாட்டேன்.

115. வெம் காழ்மனம் தொடும்கலி-கொடியவைரம் பொருந்தியமனத்தையுடைய தியகலிபுருஷன்; கைவற்றின்வண்ணமாய்-சூதின்வடிவாய்; வீழ்தலும்-புரளவும்.

116. கவுள்-கப்பாலத்தையுடைய; வல்லை-விரைவில். உன் பூங்கொடிக்கு-உன்னுடைய மனைவிக்கு; இனியாம் பொருதும்-இனிநாம் சூதாடுவோம்.

## நகர் நீங்கு படலம்.

117. உலம் கொள் தோளினேய்-திரண்டகல் போலும் தோள்களையுடைய புட்கரனே; உரைத்திடல்-சொல்லாதே; நகர்வயின்-வயின், ஏழனுருபு.

118. நளன் நடந்ததைத் தன் நாயகிக்குக் கூறுதல். எழில் கொம்பு அன்னவள்-அழகுள்ள பூங்கொம்பை ஒத்த தமயந்தியினது; நோக்குறு-பார்த்து; புண் நுழைவேல் என-புண்ணில் நுழைந்த வேலைப்போல; புகுந்தயாவையும்-நடந்தவைகளை எல்லாம், நண்

ணலர் கடந்த வேல் நம்பி-சத்துருக்களை வென்ற வேலாயுதத்தை யுடைய நளன். நம்பி-ஆண்களிற் சிறந்தவன். பெண்பால் நங்கை.

119. வீழிவாய்-வீழிக்கனிபோலும் வாயையுடைய; வெய்து உயிர்ப்பொடும்-உஷ்ணமான பெருமூச்சுடனே; ஊழ்வலி-ஜன்மாந்தரத்தில் செய்த வினைப்பயன்.

120. நசை போயு-கீர்த்தியை உடைய; மாழ்குற்று-வருந்தாது.

121. செயிர் அறு-குற்றம் இல்லாத; புயல்கறும் கூந்தலாள்-மேகத்தைப் போன்ற வாசனை பொருந்திய கூந்தலையுடைய தமயந்தி; அயில்-வேலானது; அல்மர்ந்து-மனம்குழம்பி. அலமர; பகுதி.

122. கொடிபடு கான் இடை-வண்டுகளையுடைய காட்டில்; தமியை-தனியாகிய என்னை; பயில்பரல்-குத்துகிற பரல்கற்களாகிய. கண்படில்-நித்திரை செய்தால்.

123. பொற்பினுக்கு-அழகுக்கு; அற்பினில்-அன்புடன்; என் பிரிந்து-என்னைப்பிரிந்து; நின் பிரிந்து எங்ஙனம் ஆற்றுவர்-உன்னைவிட்டுப்பிரிந்து எப்படிப் பொறுத்திருப்பார்கள்.

124. கூற்று உறழ்-யமனைப்போன்ற; குருதிவேல் குரிசில் -இரத்தம் தோய்ந்த வேலாயுதத்தையுடைய அரசனே! அருரில்-துன்பத்தில்; மாற்று அரும்-பிறரால் கெடுத்தற்கு அரிய; மகிழ்நர்-புருஷர்கள்; விழுமிதோ-மேன்மையையுடையதோ?

125. கோல் தொடி-அழகிய வளையல்களை அணிந்த தமயந்தியே! கோல் தொடி-அன்மொழித் தொகை. சீர்த்தியும்-கீர்த்தியும்.

126. வெம்சமத்திடை-கொடியயுத்தத்தில்; வெருவி-பயந்து. ஒக்கல்-பந்துக்கள்; வேட்ட அகத்தினில்-மாமனார் வீட்டில்; புன்மையோர்-கீழ்மக்கள்; பதடி-பதர்.

127. மன்றல் அம் தெரியலாய்-வாசனைபொருந்திய அழகிய மாலையையுடைய நளனே!, மின்திகழ் மானம்வேல். விதர்ப்பன் மாநகர்-மின்னல் போலும் பிரகாசிக்கிற, பெருமை பொருந்திய வேலாயுதத்தையுடைய வீமராஜனுடைய குண்டினபுரத்தில்.

128. தண்டலை இல்-நீங்கல் இல்லாத; பாகனை-தேர்ப்பாகனை; தாதுசேர்-மகரந்தப்பொடி சேர்ந்த; வண்டு இமிர்-வண்டுகள் சப்திக்கிற; தெரியலான்—மாலை அணிந்த நளன்; விண்தொடு-ஆகாயத்தை அளாவிய; புரிசை சூழ்-மதில்சூழ்ந்த; விதர்ப்பன் தன் உழை-வீமராஜனிடம்.

129. மடவரல்தன்னையும் மதுகைவேந்தையும்-தமயந்தியையும் வல்லமையையுடைய நளமகாராஜனையும்.

130. சிலதியர்-தோழிகள்; சீறடி-சிறியபாதங்கள்; நேர் இழை-நல்ல ஆபரணங்களையுடைய தமயந்தி: வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. புலவுவேல்காளை-புலால் நாற்றத்தையுடைய வேலையுடைய காளை போன்ற நளனது.

131. மண்ணிய-கழுவிய; நண்ணு அரும்- அடைதற்கருமையாகிய; தன் இணை-இரண்டுகண்கள்; கமலத்தோன்-பிரமன்.

132. தேர்மறுகு-ராஜவீதியில்; அரவு-பாம்பு.

133. வெள்ளம்-கூட்டம். கலுழ்ந்திட்டார். அழுதார்கள். அரோ-அசை.

134. இன் உயிர் செகுப்பல்-இனிய உயிர்களைவதைத்துக் கொல்லுவேன்; இசையில்-புகழ்ச்சி இல்லாத; புன்மையான்-அற்பனாகிய புட்கரன்.

135. பொருவு இல் வாய்மையான்-தனக்குச் சமானமில்லாத சத்தியத்தைக் கொண்டவன்; அரிந்தனிர் - அறுத்துவிட்டீர்கள்.

136. மேதினி-பூமியை; கோஇயல்பு-ராஜதர்மம்.

137. முளரியால்-நெருப்பால்; மொய்துகள்-நிறைந்த தூசி தனை; அளியொடு புலம்பினார்-இரக்கத்துடன் புலம்பினவர்களாய்; அழுதகண்கடை துளியினில் - அழுதகண்கடைசியிலிருந்து வந்த நீர்த்துளிகளினால்; அவித்தனர்-அவித்தார்கள்.

138. புகுமிடம்-அரசன் புகுந்த இடம்; இன்னுயிர்-இனிமை உயிர்.

139. பரிசில்-தியாகம்; உண்பலி-உண்ணப்படும் அவிப் பொருள்.

140. நேமி எங்கும்-உலகம் எங்கும்; தலைமயங்கின-தடுமாறின; தீமைமலிந்தன-துர்ச்சடத்தைகள் பெருகின; மனுநெறி திறம்பின-மனுதர்மசாஸ்திரவிதிகள் கெட்டுப்போயின.

## கான்புகுபடலம்.

142. ஆவி அம் பொன் சிறைமென்புள்- தூவி என்னப் பட்ட அழகியபொன்போலும் பிரகாசத்தையுடையஇறகைக்கொண்டமென்மையாகிய அன்னப் பக்ஷியானது; ஓவியர்-சித்திரக்காரர்கள்; எழுதரு-எழுத அருகரிய, பைங்கொடி-பசுங்கொடியைப் போன்ற சுமுயந்தி. பண்புத்தொகை அன்மொழி.

144. உளை அரிபீடவிசு உறையும் எம்பிரான்-பிடரிமயிரையுடைய சிங்கம் தாங்கிய அழகிய ஆசனத்தில் இருக்கும் எமது தலைவனான நளன்; முளரியால்-முட்செடிகளால்; விம்மினள்-அழுதாள். கொல்-அசை.

145. தடம் கணீர் துடைத்து-விசாலமாகியகண்ணினின்று வரும் நீரைத்துடைத்து; மெய் தைவந்து-தேகத்தைத் தடவிக்கொடுத்து. ஆற்றிட்-தேற்ற; மடங்கல்போல் மொய்ம்புடை-ஆண் சிங்கம் போலும் வலிமையையுடைய; மன்னர் மன்னவன்-ராஜாதிராஜனான நளன்.

## பிரிவுறு படலம்.

146. அவ்வழி அண்ணியது-அவ்வழி சமீபித்தது; வைகும் வசிப்பான்.

147. இவன் பிரிகுவது-இவளைவிட்டுப் பிரிவது; ஊறசெய் - துணிக்கிற;

148. சில் அரிநெடுங்கணாள்-சில செவ்வரிபடர்ந்த நீண்ட கண்களையுடையதமயந்தி; தெருள் உறுவகை-விழிக்காதவிதமாய்; கொடுங்கை-வளைந்தகை; ஒல்லை-விரைவில்; அல்லல் அம்கடல் இடை-துன்பமாகிய பெரிய சமுத்திரத்தில்;அரோ-ஈற்றசை.

149. ஆ இடை-அவ்விடத்தில்; அ ஏன்றது நீண்ட ஆ ஆனது. வேய்உறழ் தோளி-மூங்கிலையொத்த தோள்களையுடையவள். பித்தர்-பைத்தியகாரர்.

150. நேரலார் போர் ஏறே-விரோதிகளுக்கு போரில் ஆண்சிங்கம் போன்றவனே; ஆரம் வனீர மார்பா - முத்துமாலை அணிந்த மலைபோன்ற புஜங்களையுடையவனே. அளியேன் உயிர்க்கு-உன் கருணைக்குப் பாத்திரமாகிய அடியேனது உயிருக்கு; தண் அளி இதுவே-குளிர்ந்த அருள் இதுதானோ? ஆல், ஏ, அசைகள்.

151. வாவும்-தாவுகிற; மடப் பிடிகாள்-அழகிய பெண்யானைகளே;

152. சுடர்விட்டு ஒளிரமண்ணுந்த - ஒளிவிட்டுவிளங்கும்படி கழுவாத.

153. மடம்மான் -அழகிய மானைபோன்ற பார்வையையுடைய தமயந்தியின். மடமான்-பண்புத்தொகை. அன்மொழி; வரிவண்டு ஊதப் பொதிஅவிழ்ந்த-பாட்டையுடைய வண்டுகள் ஒலிக்க கட்டவிழ்ந்த; அந்தண்கமலமலர் கவற்றி-அழகிய குளிர்ந்த தாமரைமலரைக் வருந்தும்படி செய்து; உந்தை-உன் தகப்பன்;

154. நாமம்-பெயர்; நண்ணலற்கு-விரோதியான புட்கர னுக்கு; யாமம்-இராத்திரியில்.

155. களைவண்டு இமிரும் கருங்குழலே-களைக்கிற வண்டு கள் சப்திக்கிற கரிய கூந்தலையுடைய தமயந்தியை; இனேயல்-வருத் தப்படாதே;

## வேற்றுரு வமைந்த படலம்.

156. கள் உயிர்க்கும்-தேனைத்தருகிற; உரவோன்-வலிமை யையுடைய நள மகாராஜன்; நளன் தமயந்தியை நீத்துச் செல்லும் வழியில் தீயானது புகையொடு கொழுந்துவிட்டெரியக் கண் டான்.

157. தெருமரல் எய்தி-மயக்கம் அடைந்து; நஞ்சு உயிக் கும் - விஷத்தைக்கக்குகிற; வாள் அரவு-கொடிய பாம்பு;

158. பனைமறிந்து என்ன-பனைமரம் விழுந்திருந்ததுபோல்; பாந்தளை—பாம்பை; முனிவரால்-சாபத்தினால்; நினை வினும் தனிப் ர்ந்திடு நிலைமை ஒன்றிலன்-நினைப்பினாலும் (பிறருதவியில் லாமல்) தனித்து வேற்றிடம் செல்லலாம் என்னும் தன்மையான் அடையவில்லை; ஆசை, ஈற்றசை.

159. ஐயிரண்டடி-பத்தடி -முழுவல்-அன்பு-நிறைந்த அன்பு. பூலருன் வரத்தால்-(முன்) அக்கினிதேவன் கொடுத்த வரத்தால்; எழுவின்-தூணைப் போன்ற.

160. கதழ் எரிக்கண் நின்று - சொலிக்கிறதீயினின்றும் அதிர்—சப்திக்கிற; விதுகுலத்தில்-சந்திரகுலத்தில்

161. ஒன்னலர் செகுப்பர்-விரோதிகள் கொல்லுவார்கள்; எஞ்சி-மேற.

162. சேனை(ச்)—தேர்ப்பாகனுக; கூந்தல்மா உளம் தெரி தரு-புறமயிரையுடைய குதிரைகளின் மனத்தைத் தெரிந்து கொள் ளுகிற; விஞ்சை-வித்தை.

163. முன்னில்-நினைத்தால்; புனைநி-உடுத்துக்கொள்.

164. வல்லே-வல்லமை உள்ளவன்; உம்பர்-தேவர்களுடைய.

165. வியன்-பருத்த; வைகலும்-நாள் தோறும்; அளிப்பல்-கொடுப்பேன்.

166. அலங்கு உளை புரவிமான்-அசைகின்ற பிடரிமயிரையுடைய குதிரை கட்டிய; மீகூர-அதிகமாகக்கொள்ள.

## வீமன் தேட விட்ட படலம்.

167. இவ்வுழி-அயோத்தியில்; சேர்ந்தார்-சம்மதித்தார்கள்.

168. தரங்க வாரிதி-அலைகளையுடைய சமுத்திரமானது; உலப்புஇலார்-அளவற்றவர்கள்.

169. ஒளி மழுங்குபு-ஒளிமழுங்கி; தேசு அழிந்திடும்-தேஜஸ் அழிந்த; எசல் இல் இவட்கு பழிப்பில்லாத இவளுக்கு; ஆசு இல் கேள்வியோன்-குற்றமற்ற கேள்வி ஞானத்தையுடையவன்.

171. புனைமலர்க்குழல்-பூமாலை அணிந்த கூந்தலையுடைய; புனை-அணிந்திருக்கின்ற; சுந்தரமன்-ஓர் அரசன்; கனைக்கும்-சப்திக்கின்ற பெருங்கடலாவது; கரைபுரண்டால் எனக் கலுழ்ந்தாள்-கரை புரண்டாற் போலத் தமயந்தி அழுதாள். அதாவது அதிகமாய் அழுதாள்.

173. கக்குசெந்தழல் காலவேல் காதலன்-கக்குகின்ற செந்தீயுள்ள யமனைப் போன்ற தன்னுடைய வீமராஜனை சமீபித்து; நக்கபூங்கழல்-விளங்குகின்ற அழகிய வீரக்கழல்களை அணிந்த.

174. ஓடு அரிக்கணாள்-நீண்ட அரிபரந்த கண்களையுடைய வீமராஜன் புதல்வியானவள்; பொலம்-அழகிய; நளிகடல் வரைப்பு எலாம்-சமுத்திரம் சூழ்ந்த பூமிமுழுதும்.

175. திருவும் ஒற்றரில்-ஆராய்கின்ற வேவுகாரர்களில்; முது எயில்-பழைய் மதில்சூழ்ந்த; புரிகருங்கழல்-விரும்பப்பட்ட கரிய கூந்தலையுடைய.

176. ஒகையோடு-சந்தோஷத்துடன்; வாகை வெஞ்சிலை இருதுபன்னற்கு-வெற்றிமாலையைப் புனைந்த வெவ்வியவில்லைப் பிடித்த இருதுபன்ன ராஜனுக்கு; கொய்உளைபரி உளைம்தேர்பவன்-வெட்டப்பட்ட புறமயிரையுடைய குதிரைகளின் மனத்தை ஆராய்பவனும்; ஆர் அஞர்-பெருந்துன்பம்.

177. மழகளிற்றின்- இளமையானயானைபோல்; ஒழுகுபூங்கொடி மருங்குலாய்-தேன் ஒழுகும் பூங்கொடியை ஒத்த இடையையுடைய தமயந்தியே.

## கலிநீங்குபடலம்.

179. நாட்டம் மூன்றும் உடை நாயகன் - மூன்றுகண்களையுடைய பரமசிவன்; கங்கை-தமயந்தி; அவ்வுழி இறுத்தார் - அவ்விடம் வந்து சேர்ந்தார்கள்; பூட்டுவார்சிலை - நாண்பூட்டப்பட்ட நீண்டவில்லைத் தாங்கிய.

180. ஆளி மொய்ம்பினுய்-சிங்கம் போலும் பலத்தையுடைய இருதுபன்னராஜனே!; வாளை வென்று-வாளாயுதத்தை ஜயித்து அப்பாலுந்து செவ்வரிகள்படர்ந்து; மைதோய்ந்த-மைதீட்டப்பட்ட; கண்மீட்டவர்கள்-கண்களையுடைய தமயந்தி;

181. உளைவயப்பரம்புரவியின்-பிடரிமயிரையும் வெற்றியையும் உடையபசுமையாகிய குதிரைகளின்; அளிமுரன்று-வண்டுகள் சப்தித்து.

182. மிழற்றும் தீம்கிளவி-பேசுகின்ற இனியவார்த்தைகளையுடையீர்; இழைத்தனன்-செய்தான்.

183. நொறில் வயம்பரி-வேகமும் வெற்றியும் உடைய குதிரைகள் கட்டிய; நொய்தினில் கொணரா-விரைவில் கொண்டு

வீந்து; வெறுபு வலி-மிகுந்தவலிமையையுடைய; இவரின்-இறிஞல்; உறவல்-அடைவேன்.

184. முத்தம் வெண்குடை-முத்திஞற் செய்த வெள்ளைக் குடையையுடைய; உத்தரீயம்-மேலாடை; நெறிஇடை-வழியில்; தத்துவாம்பரி-தாவி ஓடுகின்ற குதிரை; துகில்-வஸ்திரம்;

186. நகைத்து-சிறுத்தி; நொக்க-நெருங்கிய; ஆன்ற கேள்வியோன்-நிறைந்தகேள்வியையுடைய நளன்.

187. மருவிநின்று - பிடித்திருந்த; தணர்துவசி - விட்டுப் போய்; எரிசெய் வெவ்விடம்-தகிக்கின்ற கொடிய விஷமானது; கான்றலில்-நளனிடத்தில் கக்கினமையால்.

188. அணங்கு அரா-அச்சத்தைத்தருகின்ற பாம்பு; அயர்ந்தேன்-சோர்ந்தேன்.

189. ஆடல்வேல் அரசன் - விரோதிகளைக் கொல்லுகின்ற வேலாயுதத்தையுடைய நளமகாராஜன்; குழைத்த-தளிர்த்திருந்த;

## தேவியைக் கண்ணுற்றபடலம்.

190. புரிவேன்-செய்வேன்; தீம்புனல்-இனிய நீர்.

191. கொழுநன்-புருஷன்; விழைவினேடு-ஆசையோடு.

192. அழல் இடுமெழுகின் - தீயில் இட்ட மெழுகுபோல்; தொடர்ந்த மும்மலம்-சன்மங்கள்தோறும் பின்பற்றிவரும் ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்று மலத்தையும்; முருக்கி-கெடுத்து; வெம்பவம் கடல் தொடர்-கொடிய ஜன்மசமுத்திரம் நீங்க; கடந்துளோர்களும்-துறவிகளும்.

194. மன்னவன் பணியினுல்-ஸ்ரீமராஜனுடைய உத்திரவால்; வம்மெனா-வாருங்கள் என்று.

195. மறுஇல்-குற்றம் இல்லாத; பானவேல்-வலியவேலாயுதத்தையுடைய; கண்படை கொள்வான்-நித்திரை செய்கின்றவன்; இறை-சிறிது பொழுதும்; இமுக்குஉரு-தவறாத.

196. புன்னகத்துறை - பாம்புகளுக்கரசனான கார்க்கோடகன்; பரிவால்-அன்புடன்; கன்னல் வேளினும் கவின்கலம் கனிக்கிடநின்றான்-கருப்பு வில்லையுடைய மன்மதனைப் பார்க்கிலும் அழகின் நன்மையானது மிகுந்திருக்கும்படி நின்றான்.

197. மாதிரம்-மலைகள்; மலர்மேல் [illegible] தாமரைப் புஷ்பத்திலிருக்கிற திருமகள்.

## அரசாட்சிப்படலம்.

198. மழை-மழைபோன்ற; களி-களிப்பு; கலினம் வா(வு)ம் பரியும்- கடிவாளத்தையுடைய தாவும் குதிரைகளும்; வயவரும்-படைவீரர்களும்; அழல் உயிர்க்கும்-நெருப்பைக் கக்குகின்ற;

199. மொய் அமர்-நெருங்கிய யுத்தம்; சவறு ஆடுவான்-சூதாடும்படி. தோன்றல் [illegible]

200. சேர்ந்தனன்-[illegible]த்தேன்; எம்பி-என்தம்பி; தொல் நகர்க்கு-பழைமையாகிய உன் நகரத்திற்கு; பணித்தனன்- ஆக்ஞாபித்தான்.

201. ஆழி ஒன்று உருட்டி-ஏகசக்கரத்தைச் செலுத்தி; [illegible] மகம் ஆற்றி-பலயாகங்கள் செய்து; [illegible]-முகப்பட்டாம் அணிந்த பெரிய மலையைப் போன்ற எட்டுத்திக்கு யானைகளும்; பிடர் [illegible] பிடரியில் தாங்கிய; பாழி அம்புயத்து-வலிய அழகிய தோளினிடத்தில்; உலகுஎலாம் [illegible]த்து இனிது இருந்தான் - உலகமுழுதையும் தாங்கிச் சந்தோஷமாக நன்கு இருந்தான்.